௧ வெளியீடு : ௫௬௪

94

# பௌத்தமும் தமிழும்





மயிலை, சீனி. வேங்கடசாமி



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை, 1.

## உரிமையுரை

தமிழைக் கற்பதும் அதனைப் பல்லோர்க்குங் கற்பிப்பதும் தமிழ்த் தொண்டென்பதூஉம், அதனைக் கற்றுங் கற்பித்தும் வருகின்ற பெரியோரைப் போற்றுவது தமிழ்த் தாயை வழிபடுவதொக்குமென்பதூஉம் வாய்மையாதலின், தமது வாழ்நாள் முழுவதும் தமிழை ஆராய்ந்து கற்றும் கற்பித்தும் வருகின்ற பெரியார், சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கிய நற்குணச் செம்மல், **உயர்திரு. ச. த. சற்குணர்** அவர்களுக்கு இந்நூலாசிரியர் ஆர்வத்துடன் அணிவிக்கும் அன்புமலராக இந்நூல் இலங்குக.

# முதலியார் ஏ. டி. எஸ். ஜி. புஞ்சிஹேவா அவர்கள்*
கூறிய
# அணிந்துரை

---

## மும்மணிக்த வந்தனம்

பண்டைக்காலத்தில் நிகழ்ந்து மறக்கப்பட்டுள்ள பழைய நாட்டுச் செய்திகளை முற்றாக நுணுகியாராய்ந்து பார்த்துத் திட்டமான முடிபுகளைச் சான்றுகளுடன் தற்கால உலகத்தாருடைய நன்மைக்காக வெளிப்படுத்தல் கற்றறிந்த மாந்தர் கடனாகும். "பௌத்தமும் தமிழும்" என்னும் புத்தகத்தின் ஆசிரியராகிய ஸ்ரீ மயிலை, சீனி. வேங்கடசாமி அவர்கள் மேற்படி கடமையை யறிந்து அவ்வாறு நடக்கும் கல்விமானாகத் தோன்றுகிறார். முற்காலத்தில் பௌத்த சமயம் தமிழ்நாட்டினுட் புகுந்து வளர்ந்து செல்வாக்கடைந்து அந்நாட்டுக்குச் சிறந்த நன்மையைச் செய்து, "பிறத்தலும் மூத்தலும் பிணிபட்டிரங்கலும், இறத்தலும்" என்னும் உலகவியல்பின் வசப்பட்டுள்ள பௌத்த சமயம் அந்நாட்டினின்று கடைசியாக அழிந்துபோன வரலாறு கூறும் இப்புத்தகம் இப்போதுள்ள தமிழருக்கும் பௌத்தருக்கும் தகுதியான நூலாகும்.

பாலி, தமிழ், சிங்களம், ஆங்கிலம் முதலிய மொழிகளிலுள்ள நூல்களையும் கல்வெட்டுச் சாசனங்களையும் பாழான புத்தராலயங்களையும் பிரதிமைகளையும் ஆதாரமாகக்கொண்டு இந்நூல், பல பல முயற்சிகளுடன் இயற்றப்பட்டதாகக் காணலாகும். இலங்கையைப் பற்றி இந்நூலிற் கூறப்பட்டுள்ள செய்திகள் இங்கு வழங்குங் கிரந்தங்களில் காணப்படும் விவரங்களுடன் பொருத்தமுள்ளன.

---

* இலங்கைவாசியும் சிங்களவருமாகிய திரு. முதலியார் ஏ. டி. எஸ். ஜி. புஞ்சிஹேவா அவர்கள், தாய்மொழியாகிய சிங்களத்தையும், தமிழ், சம்ஸ்கிருதம், பாலி, ஆங்கிலம் என்னும் மொழிகளையும் கற்றவர்கள். தமிழ் இலக்கணத்தைச் சிங்களமொழியில் சப்தாகர(ம்) என்னும் பெயருடன் எழுதியிருக்கிறார்கள். காளிதாசர் சம்ஸ்கிருதத்தில் எழுதிய இருது சங்காரம் என்னும் நூலின் முதற் சருக்கத்தைச் சிங்களம், தமிழ், ஆங்கிலம் என்னும் மொழிகளில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். இலங்கை அரசாங்கத்தில் சி. ஐ. டி. போலீஸ் பகுதியில் முதலியாராக இருந்து இப்போது இளைப்பாறியுள்ளார்கள்.

புத்ததத்ததேரர் முதலிய பாலி நூலாசிரியர்களைப்பற்றிய வரலாறுகளை இத்தனை விவரத்தோடே இலங்கை நூல்களில் காணவில்லை. தமிழ்ப் பௌத்த சமயாளிகள், பௌத்தக் கொள்கைகளை யடக்கிக்கொண்டு தமிழ்மொழியிலியற்றிய நூல்களைப்பற்றிய செய்தி யாதொன்றும் ஈண்டில்லை. அன்றியும், மகிந்தரின் தலைமையில் பௌத்த சமயம் தமிழ்நாட்டினுட்புகுந்த வரலாறும் காணப்படுகிறதில்லை. மகிந்தர், மணிமேகலையில் சொல்லிய அறவணவடிகளைப் போலவே, சித்தி யுள்ளவராவர். அவர் தம்மைச் சேர்ந்த மற்றும் பிக்குகளுடன் ஆகாய வழியாக வந்து இலங்கையடைந்ததாக ஈண்டுள்ள நூல்கள் கூறுகின்றன.

ஆசாரிய தருமபாலதேரர், புத்ததத்ததேரர் முதலிய தேரர்கள் இயற்றிய அருமையான நூல்கள் ஒழுங்காக இலங்கையில் வழங்கி வருகின்றன. அந்நூல்கள் பௌத்தமதக் கொள்கையையும் பாலி மொழியையும் இலக்கணத்தையும் நன்கு தெரிந்துகொள்வதற்குப் பயன்படுகின்றன. இலங்கைப் பிக்குகள் முதலிய பௌத்தர்கள் மேற்சொல்லிய தேரர்கள் செய்த நன்மையைப் பாராட்டி அவர்களைக் கண்ணியமாக மதிக்கிறார்கள்.

பௌத்த சமயத்தைப்பற்றி இந்நூலில் சொல்லிய எல்லா விவரங்களும் பௌத்தர்களால் ஒப்புக்கொள்ளத்தக்க நிலையிலிருக் கின்றன.

இந்தியாவில் மறைந்தொளிந்திருந்த பௌத்த சமயவிடயத்தைப் பற்றிய வரலாற்றை நன்கு ஆராய்ந்து வெளியிட்டதற்காக எமக்காக வும் பௌத்த உலகத்துக்காகவும் இந்நூலாசிரியருக்கு நன்றியறிவு கூறுகின்றேன். இந்நூல் சிங்கள மொழியில் மொழிபெயர்த்து வெளியிடுவது சிங்கள பௌத்தருக்குப் பயன்படும்.*

கத்தலுவா,<br>அகங்கமம்,<br>இலங்கை,<br>26-10-40.

இங்ஙனம்,<br>முதலியார், ஏ. டி. எஸ். ஜி. புஞ்சிஹேவா

* முதலியார் புஞ்சிஹேவா அவர்கள், இந்நூலை சிங்களத்தில் மொழிபெயர்த்து வெளியிடுவது சிங்களவருக்குப் பயன்படும் என்று 1940-இல் எழுதியதற்கேற்ப, இந்நூலை, எமது சம்மதம் பெற்று, இப்போது சிங்களமொழியில் மொழிபெயர்த்து எழுதி வருகிறார்கள்.
—நூலாசிரியன்.




## முன்னுரை

"பௌத்தமும் தமிழும்" என்னும் இந்நூலின் முதற் பதிப்பு 1940-இல் வெளிவந்தது; இப்போது இந்நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. இப்பதிப்பில் பல செய்திகள் புதியனவாகச் சேர்க்கப்பட்டுள்ளன. முன்பு ஒன்பது அதிகாரங்களோடு இருந்த இந்நூல், இப்போது பதின்மூன்று அதிகாரங்களாக விரிவடைந்திருக்கிறது. வேண்டாத சில செய்திகள் தள்ளப்பட்டன. முதற் பதிப்பைவிட இப்பதிப்பு பலவகையில் சிறப்புடையது.

இந்நூலுக்கு அணிந்துரை எழுதிய முதலியார் ஸ்ரீ எ. டி. எஸ். ஜி. புஞ்சிஹேவா அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்விரண்டாம் பதிப்பை அழகுற வெளியிட்ட, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கு எனது நன்றி உரியது.

மலரகம், மயிலாப்பூர்,
சென்னை, 30-10-50.

மயிலை, சீனி. வேங்கடசாமி.

# முதற் பதிப்பின்

# முன்னுரை

ஒரு காலத்தில் பௌத்தமதம் தமிழ்நாட்டில் சிறப்புற்றிருந்தது. ஏறக்குறைய கி. மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரையில் இந்த மதம் தமிழ்நாட்டில் உயர்நிலை பெற்றிருந்தது. பிற்காலத்தில், பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னர், இந்த மதம் மறையத் தொடங்கி, இப்போது முழுவதும் தமிழ்நாட்டில் மறைந்துவிட்டது. இப்போதைய தமிழர், ஒரு காலத்தில் பௌத்த மதம் தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததென்பதை முற்றும் மறந்துவிட்டனர்; அது இவர்களுக்குப் பழங்கதையாய், கனவாய் மறைந்துவிட்டது.

எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர், பல நூற்றாண்டாகத் தமிழகத்தில் பரவியிருந்த பௌத்த மதம், தமிழ்மொழியிலும் தன் செல்வாக்கைச் செலுத்தியிருக்க வேண்டுமன்றோ? பௌத்தர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டுகள், அல்லது உதவிகள் யாவை? பௌத்தர் தமிழ்மொழியில் இயற்றிய நூல்கள் எவை? அவற்றின் வரலாறு என்ன? இவற்றை அறியக் கருதி யாம் செய்த ஆராய்ச்சியின் பயனே இந்நூலாகும். பௌத்தர் தமிழ்மொழிக்குச் செய்த தொண்டினை மட்டும் ஆராய்வதே எமது முதல் நோக்கமாயிருந்தது. பின்னர், இந்த ஆராய்ச்சி, பௌத்தம் தமிழ்நாட்டில் வந்ததும், வளர்ந்ததும், மறைந்ததுமான வரலாறுகளையும் சுருக்கமாக எழுதும்படி செய்துவிட்டது. பௌத்தரால் தமிழருக்குண்டான நன்மையை ஆராய்வதே இந்நூலின் முதல் நோக்கமாகையாலும், இது தமிழ் மொழி வரலாற்றின் ஒரு பகுதியாகையாலும், இந்நூலுக்குப் 'பௌத்தமும் தமிழும்' என்னும் பெயர் சூட்டப்பட்டது.

வேறு வேலைகளுக்கிடையே, ஓய்வு நேரத்தில்மட்டும் இதனை ஆராய்ச்சி செய்ய வேண்டியிருந்தபடியினாலும், பல இன்னல்களுக்கிடையே இதனை எழுதவேண்டியிருந்தபடியினாலும் யாம் கருதிய அளவு இந்நூல் ஆக்கப்படவில்லை. ஆயினும், எமது ஆற்றலுக்கு இயன்றவரையில் முயன்று, கிடைக்கக்கூடிய ஆதாரங்களை அடிப்படையாகக்கொண்டு இந்நூல் இயற்றப்பெற்றுள்ளது. தமிழ்நாட்டுப் பௌத்தமத வரலாற்றினைக் கூறுவதும் பௌத்தர் தமிழ்மொழிக்குச்

செய்த தொண்டுகளை ஒருங்காராய்ந்து விளக்குவதுமான நூல் தமிழ்மொழியில், யாம் அறிந்த வரையில், இதுவே முதலாவதாகும். இதுவரையில் மறைந்து கிடந்தனவும், மாய்ந்துபோகுந் தறுவாயி லிருந்தனவுமான வரலாறுகளும் செய்திகளும், இவ்வாராய்ச்சியால் உயிர்ப்பிக்கப்பட்டு வெளிப்படுத்தப்படுகின்றன.

இந்த ஆராய்ச்சியைத் தொடங்கிய பின்னர், பாலி என்னும் மாகதி மொழியில் உள்ள பௌத்தநூல்களை நேரே படித்தறிந்தா லன்றித் தமிழ்நாட்டுப் பௌத்தமத வரலாற்றின் ஆராய்ச்சி முற்றுப் பெறுதென்பதை உணர்ந்தோம். ஏனென்றால், பௌத்தரால் போற்றப்படுகின்ற பாலிமொழிநூல்களில் சிலவற்றை இயற்றியவர் களும், பாலிமொழியில் உள்ள நூல்களுக்குச் சிறந்த உரைகளைப் பாலிமொழியில் இயற்றியவர்களும் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்த தமிழ்ப் பௌத்தர்களாவர். அன்றியும், தமிழ்நாட்டில் பௌத்தமதம் நிலைபெற்றிருந்த காலங்களில், பாலிமொழி தமிழ்நாட்டுப் பௌத்தர் களின் 'தெய்வ பாஷை'யாக இருந்தது. இக்காரணங்களினால், தமிழ்நாட்டுப் பௌத்தமத ஆராய்ச்சிக்குப் பாலிமொழியறிவு பெரி தும் வேண்டற்பாலது. பாலிமொழியறியாத குறை எமக்குண்டு. ஆயினும், ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள பாலிமொழி நூல்களினால் இக்குறை ஒருவாறு நீக்கப்பட்டது. சென்னைப் பிரம்பூரில் உள்ள மகாபோதி ஆஸ்ரமத்தைச் சேர்ந்த ஸ்ரீ சத்தர்மா சாரிய சோமாநந்த ஸ்தவிரர் அவர்கள், பாலிமொழி நூல்களில் சில பகுதிகளை மொழிபெயர்த்துச் சொன்னார்கள். இந்த உதவிக்காக எமது நன்றி அவருக்குரியதாகும். ஆயினும், நேர்முகமாகப் பாலி மொழியை அறிந்திருக்கவேண்டுவது தமிழ்நாட்டுப் பௌத்தமத ஆராய்ச்சிக்கு இன்றியமையாததாகும்.

ஆராய்ச்சி செய்வோர் உவத்தல் வெறுத்தல் இன்றி, சான்றுகள் காட்டும் ஆராய்ச்சி முடிவுகளை உள்ளது உள்ளவாறு கூறுதல் வேண்டும்; தமது கொள்கைக்கு முரண்பட்டதாக இருப்பினும், உண்மையையே நடுநின்று கூறுதல்வேண்டும். தமது கொள்கைக்கு முரண்பட்டதாகத் தோன்றுவதாலோ அல்லது உண்மையைக் கூறினால் உலகம் சீறுமென்னும் அச்சத்தாலோ, உண்மை கூறாமல் விடுவோர் தமக்கும் நாட்டுக்கும் தீங்கு செய்தோராவர். இந்தக் கொள்கையை மனதிற் கொண்டுதான் யாம் எமது ஆராய்ச்சியிற் கண்ட முடிபுகளை இந்நூலுள் கூறியுள்ளோம். வாசகர் இந்நூலுள்

தம் கொள்கைக்கு மாறுபட்ட கருத்தைக் கண்டால், அதன்பொருட்டு எம்மீது சீற்றங்கொள்ளாமல், அது எம் ஆராய்ச்சி காட்டிய முடிபு எனக்கொள்வாராக. எந்த மதத்தையாவது குறைகூறவேண்டுமென் பதோ அல்லது போற்றவேண்டுமென்பதோ எமது கருத்தன்று. உண்மை புணரவேண்டும் என்பதொன்றே எம் கருத்து. இந்நூல் எழுதப்பட்டதும் அக்கருத்துடையார்க்கே.

இந்நூலுள் ஒரோவிடங்களில் சில செய்திகள் மீண்டும் கூறப் படும். அவற்றைக் 'கூறியது கூறல்' என்னும் குற்றமாகக் கொள்ளாமல், இது ஆராய்ச்சி நூலாதலின், தெளிவுபற்றி அநுவாத மாக அவ்வாறு கூறப்பட்டதெனக் கொள்க. இந்நூலினைத் தமி ழுலகம் ஏற்றுக்கொண்டு, இதுபோன்ற தமிழ்த்தொண்டினை மேன் மேலும் இயற்றப் பெரிதும் ஊக்குவிக்கும் எனப் பெரிதும் நம்பு கின்றோம்.

மைலாப்பூர், சென்னை.
5—1—'40.

மயிலை, சீனி. வேங்கடசாமி.

# உள்ளுறை

# படங்கள்

# பௌத்தமும் தமிழும்



## க. கௌதமபுத்தர் வாழ்க்கை வரலாறு

உலகத்திலே அறம் குன்றி மறம் வளர்ந்து மக்கள் அல்லலுறுங் காலங்களிலெல்லாம் புத்தர்கள் தோன்றி அறவழியைப் புகட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறார்கள் என்பதும், பற்பல கற்ப காலங்களில் கணக்கற்ற புத்தர்கள் தோன்றி அறநெறியை நாட்டிச் சென்றார்கள் என்பதும், இப்போது நடைபெறுகிற இந்தக் கற்ப காலத்திலே இருபத்தைந்து புத்தர்கள் தோன்றினார்கள் என்பதும், அவர்களுள் கடைசியாக வந்தவர் **கௌதமபுத்தர்** என்பதும் பௌத்தசமயக் கொள்கைகள். இனி வரப்போகிற புத்தரது பெயர் மயித்ரேய புத்தர் என்பதும், அவர் இப்போது துஷிதலோகம் என்னும் தெய்வலோகத்திலே நாததேவர் என்னும் பெயருடன் இருக்கிறார் என்பதும் அந்த மதக் கொள்கைகளாம்.

பல புத்தர்கள் இருந்தார்கள் என்று பௌத்த சமய நூல்கள் கூறினாலும், சரித்திர நூலோர், கௌதமபுத்தரை மட்டும் சரித்திரகால புத்தர் என்று கொள்கிறார்கள். கௌதமபுத்தருடைய வரலாறு தனி நூல்களாக எழுதப் பட்டுள்ளன வாகையினாலே, ஈண்டு அவரது வரலாற்றை மிகச் சுருக்கமாகக் கூறுகிறோம்.

சாக்கிய குலத்திலே கௌதம குடும்பத்தைச் சேர்ந்த **சுத்தோதனர்** என்னும் அரசர் கபிலவத்து என்னும் ஊரை அரசாண்டுவந்தார். கபிலவத்து, இமயமலை அடிவாரத்திலே இப்போதைய நேபாள நாட்டில் இருந்தது. சுத்தோதன அரசருக்கும் அவரது மனைவியாராகிய மாயாதேவிக்

கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. கி. மு. ஆரும் நூற்ருண்டிலே, அதாவது ஏறக்குறைய கி. மு. 563-இல் இந்தக் குழந்தை பிறந்ததாகச் சரித்திர நூலோர் கூறுவர். இக் குழவிக்குச் சித்தார்த்தர் என்று பெயர் சூட்டினர்கள். இக் குழந்தைதான் பிற்காலத்திலே புத்தர்பெருமாளுக விளங்கியது.

சித்தார்த்தர் பெரியவனுனல் துறவியாய்விடுவார் என்று நிமித்திகர் கூறியதைக் கேட்டு, அரசன் மனம் வருந்தி, அக்குழந்தைக்குத் துறவு பூணும் எண்ணம் தோன்ருமலிருக்கும்பொருட்டு அதனைச் செல்வத்திலும் சுகபோகங்களிலும் திளைத்துவரச் செய்தார். உலக வாழ்க்கையில் வெறுப்புத் தோன்ருதபடி இன்ப சுகங்களைக் கொடுத்துவந்தார். குழந்தை வளர்ந்து பதினுறு வயதுள்ள குமாரனுனபோது, அவருக்கு விருப்பமுள்ள ஒரு அரசிளங்குமரியை மணம் செய்துவைத்தார். சித்தார்த்த குமாரனுடைய இருபத்தொன்பதாவது ஆண்டிலே, அவருக்கு இராகுலன் என்னும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த அன்றைக்கே, சித்தார்த்தர் துறவு கொள்வதற்குக் காரணமான நிகழ்ச்சிகள் ஏற்பட்டன. வயது முதிர்ந்த "தொண்டு" கிழவர், கடும்பிணியினுல் வருந்தும் நோயாளிகள், இறந்துபட்ட உடலாகிய பிணம் முதலிய துன்பக் காட்சிகளைச் சித்தார்த்தர் காண்பதற்கு வாய்ப்பில்லாதபடி அவரது தந்தையார் ஏற்பாடு செய்திருந்தும், இக்காட்சிகளை யெல்லாம் அவர் காணும்படி நேரிட்டது. மிகவும் வயது முதிர்ந்த தள்ளாத கிழவர் ஒருவரை அவர் கண்டார். பிறகு, கொடிய நோயினுல் வருந்தி வாய்விட்டலறிய ஒரு நோயாளியையும், உயிர் நீங்கிப் பிணமாகக் கிடந்த ஒரு மனித உடலினையும் அவர் காண நேரிட்டது. பின்னர், துறவி ஒருவரைக் காணும் வாய்ப்பு ஏற்பட்டது. துறவறவாழ்க்கை கவலையற்ற இன்ப வாழ்க்கை என்று அவர் கண்டார். மேலே கூறிய காட்சிகளை எல்லாம் காணப்பெற்ற சித்தார்த்தருக்கு, மனித வாழ்க்கை துன்பத்தினுல் சூழப்பட்டது என்றும், துன்ப

வாழ்க்கையிலிருந்து நீங்கி நிலைத்த இன்பநெறியைக் கண்டு பிடித்து உலகத்தாரை உய்விக்கவேண்டும் என்றும் பேரவா உண்டாயிற்று. ஆகவே, அவர், அன்று நள்ளிரவிலே தமது ஒரே மகனையும், மனைவியையும், தாய் தந்தையரை யும், இன்ப சுகங்களையும், அரச உரிமையையும், செல்வங் களையும், சுகபோகங்களையும் துறந்து காட்டிற்குச் சென்றார்.

முதலில், ஆளார காலாம என்பவர் இடத்திலும், பிறகு, உத்தக ராமபுத்திர என்பவர் இடத்திலும் சீடராக அமர்ந்து அவர்கள் காட்டிய வழியில் ஒழுகினார். விரை விலே, அவர்கள் காட்டிய நெறி மக்களை உய்விக்கும் நெறி யல்லவென்று கண்டு, அவர்களைவிட்டு உருவேல என்னும் இடத்திற் சென்று, உண்ணாவிரதம் பூண்டு கடுந்தபசு செய் தார். அப்போது ஐந்து துறவிகள் இவரையடுத்து இவ ருடன் இருந்தார்கள். உணவுகொள்ளாமல் உடலை வாட்டி ஒடுக்கிக் கடுந்தபசு செய்தமையினாலே, குருதியும் தசையும் வற்றி எலும்பும் நரம்பும் தெரியும்படி உடல் நலிந்து வலிவு இல்லாமல் மயங்கி விழுந்தார். அதன்பிறகு, அளவுக்கு மிஞ்சி உடம்பைப் பட்டினியால் வாட்டுவது தவறு என் றும், அது மெய்ஞ்ஞானம் பெற வழியன்றென்றும் கண்டு அன்றுமுதல் சிறிதளவு உணவுகொள்ளத் துணிந்தார். இதனைக்கண்ட இவருடன் இருந்த பிக்குகள் இவரைவிட்டுப் போய்விட்டார்கள். கடைசியாகப் போதி (அரச) மரத் தின் அடியில் அமர்ந்து தியானத்தில் இருந்தபோது மெய்ஞ்ஞான ஒளியைக் காணப்பெற்றார். மெய்ஞ்ஞான ஒளியைக் கண்ட சித்தார்த்தர் புத்தர் ஆனார். ஞானமாகிய போதி கைவரப்பெற்று, பிறவித்துன்பத்தைக் கடந்து பிறவாமையாகிய இன்பநெறியைக் கண்டார். அப்போது அவருக்கு வயது முப்பத்தைந்து.

பிறகு, புத்தர், தம்மை விட்டுச்சென்ற ஐந்து பிக்கு களைத் தேடிச்சென்று அவர்களுக்குத் தாம் கண்ட உண்மைகளைப் போதித்தார். அவர்கள் இவரது உபதேசங் களைக் கேட்டு இவருக்குச் சீடர் ஆனார்கள். பிறகு, பல துறவிகள் இவருக்குச் சீடர் ஆயினர். அறுபதுபேர் சீட

ரானவுடன், அவர்களை ஊரெங்கும் அனுப்பித் தமது பௌத்தமதத்தைப் போதிக்கச் செய்தார். தாமும் பல இடங்களுக்குச் சென்று போதித்தார். இவரது புதிய உபதேசத்தைக் கேட்டு, வேறு மதத் துறவிகளும் கூட்டங் கூட்டமாகப் பௌத்தமதத்தில் சேர்ந்தார்கள். துறவிகள் மட்டும் அன்று; இல்லறத்தாராகிய அரசர்களும், நிலக் கிழார்களும், வணிகரும், செல்வந்தரும், பாமரமக்களும் பௌத்தமதத்தை மேற்கொண்டார்கள். நாற்பத்தைந்து ஆண்டுகள் நாடெங்கும் சுற்றித் திரிந்து புத்தர் தமது கொள்கையைப் போதித்தார்.

துறவிகளாகிய பிக்குகளும் பிக்குணிகளும் ஒழுக வேண்டிய முறைகளை வகுத்தார். பிக்கு சங்கத்தை ஏற் படுத்தினார்.

அரசர்களும், பிரபுக்களும் பிக்ஷுக்கள் தங்குவதற்கு விகாரைகளையும் பள்ளிகளையும் அமைத்துக் கொடுத்து நிலபுலங்களைத் தானம் வழங்கினார்கள்.

இவரது முதுமைக்காலத்தில் இவருக்கு மாறாகச் சிலர் கிளம்பி இவர் உண்டாக்கிய பௌத்த மதத்தில் பிளவு உண்டாக்க முயற்சித்தார்கள். ஆனால், இவர் பிளவு ஏற் படாதபடி செய்தார்.

புத்தர்பெருமான் தமது எண்பதாவது ஆண்டில் கி. மு. 483-இல் குசி நகரத்தில் நிர்வாண மோக்ஷம் அடைந்தார். குசி நகரத்தார் இவர் உடலுக்கு இறுதிக் கடமைகளைச் செய்தார்கள். கொளுத்தப்பட்டு எஞ்சிய இவரது உடம்பின் சாம்பலும் எலும்பும் எட்டுப் பகுதி யாகப் பகுக்கப்பட்டு எட்டு ஊர்களில் புதைக்கப்பட்டு அவற்றின்மேல் சைத்தியாலயங்கள் கட்டப்பட்டன.

புத்தருக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தார்கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சாரிபுத்திரர், மொக்கல் லானர் (மௌத்தல்யானர்), மகாகாசிபர், உபாலி, ஆநந்தர், அனுருத்தர், காத்யாயனர் முதலானவர். மகதநாட்டரசர் பிம்பிசாரரும், கோசலநாட்டரசர் பசேனதி (பிரசேனஜித்)

என்பவரும் இவருடைய சீடர்களாயிருந்து இவரது மதம் பரவுவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள்.

புத்தர்பெருமான் உயிர் வாழ்ந்திருந்த காலத்திலே பல மதங்கள் இருந்தன. ஜைன மதத்தின் கடைசி தீர்த்தங்கரரான வர்த்தமான மகாவீரர் (நிகந்த நாதபுத்த) என்பவர் இவர் காலத்தில் இருந்த ஜைனமதத் தலைவர். மகாவீரர், வயதினால் புத்தருக்கு மூத்தவர். ஜைனமதத் துறவிகள் உடலை வாட்டி ஒடுக்கி உண்ணாவிரதமிருந்து கடுநோன்பு நோற்றுவந்தனர். கோசாலி மக்கலி என்பவர் உண்டாக்கிய ஆஜீவகமதமும் புத்தர்காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆஜீவகமதத்தை யுண்டாக்கிய மற்கலி (மக்கலி)யும் புத்தர்காலத்திலே உயிர்வாழ்ந்திருந்தவர். (ஆஜீவகமதத்தைப்பற்றி இந்நூல் இணைப்பில் காண்க.) ஆஜீவகமதத் துறவிகளும், நிகண்ட (ஜைன) மதத் துறவிகளும் உடையின்றி அம்மணமாகத் திரிந்தார்கள். அக்காலத்தில் இருந்த இன்னொரு முக்கியமான மதம் பிராமண மதம் எனப்படும் வைதீக மதமாகும். பிராமணர்கள் ஆடு மாடு குதிரை முதலிய மிருகங்களைக் கொன்று கொலை வேள்வி செய்துவந்ததோடு சாதிப்பிரிவையும் வளர்த்து வந்தார்கள். இன்னும் சில மதங்கள் அக்காலத்தில் இருந்தனவாயினும், குறிப்பிடத்தக்கவை ஜைன, ஆஜீவக, வைதீகம் என்னும் மூன்று மதங்களாம். இந்த மூன்று மதங்களும் பௌத்தமதத்தோடு ஆதிமுதல் போரிட்டுக் கொண்டிருந்தன.

---

## உ. திரிபிடக வரலாறு

பௌத்த வேதத்திற்குத் திரிபிடகம் என்பது பெயர். பாலி மொழியிலே இது திபிடகம் என்று கூறப்படும். திரிபிடகம் என்பதற்கு மூன்று கூடை என்பது பொருள். அஃதாவது மூன்று வகுப்பு என்பது பொருள். பிடகத்தைப் பிடக்கு என்று தேவாரம் கூறுகிறது. வடஇந்தியாவிலே அக்காலத்தில் பெரும்பான்மையோர் வழங்கிவந்த அர்த்தமாகதி எனப்படும் பாலிமொழியிலே புத்தர் பெருமான் தமது கருத்துக்களை வெளியிட்டார். நாற்பத்தைந்து ஆண்டுகளாகப் புத்தர்பெருமான் தமது கொள்கைகளை நாடெங்கும் போதித்துவந்தபோதிலும், அவர் அக்கொள்கைகளை நூல் வடிவமாக எழுதிவைக்கவில்லை. ஆனால், அவருடைய சீடர்கள், அவருடைய போதனைகளை இரண்டு சம்ஹிதை (தொகுப்பு) களாகத் தொகுத்துப் பாராயணம் செய்துவந்தனர். அத்தொகுப்புகளில், பிக்குகளும் பிக்குணிகளும் ஒழுகவேண்டிய ஒழுக்கங்களைக் கூறுகிற விநயம் என்பது ஒன்று; தர்மம் (அறிநெறி) என்பது மற்றொன்று.

புத்தர்பெருமான் நிர்வாணமோக்ஷம் அடைந்த சில திங்களுக்குப் பின்னர், மகதநாட்டுத் தலைநகரமான ராஜகிருஹ நகரத்திற்கு அண்மையில் இருந்த ஸத்தபணி என்னும் மலைக்குகையிலே கார்காலத்தைக் கழிக்கும்பொருட்டு ஐந்நூறு தேரர்கள் (வயது முதிர்ந்த பிக்குகள்) ஒருங்கு கூடினார்கள். இதுவே பிக்ஷு சங்கத்தார் கூடிய முதல் மகாநாடு ஆகும். புத்தருடைய முக்கிய சீடர்களில் ஒருவராகிய **மகாகாசிபர்** இந்த மகாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். புத்தர்பெருமான் அருளிய **விநய** போதனைகளை அவருடைய மற்றொரு முக்கிய சீடராகிய **உபாலி** என்பவர் ஓதினார். இன்னொரு முக்கிய சீடராகிய **ஆநந்தர்**, புத்தர் அருளிய **தம்ம** போதனைகளை ஓதினார். இவ்வாறு, இந்த முதல் சங்கத்திலே விநயபிடகம், தம்ம (அபிதம்ம) பிடகம் என்னும் இரண்டு பிடகங்கள் மட்டும் தொகுக்கப்பட்டன.

(சூத்திரபிடகம் என்னும் மூன்றாவது பிடகம், அபிதம்ம பிடகத்திலிருந்து பிற்காலத்தில் பிரித்துத் தொகுக்கப் பட்டது.) இவ்வாறு ஆதியில் இரண்டு பிடகங்களாக இருந்தவை பிற்காலத்திலே, மூன்று பிடகங்களாகத் தொகுக்கப்பட்டன. ஆகவே, முதலில் கூறியபடி இவற் றிற்குத் திரிபிடகம் என்று பெயர் உண்டாயிற்று.

திரிபிடகம் தொகுக்கப்பட்டபிறகும், அவை எழுதா மறையாகவே இருந்தன. பிடகங்களைப் பிக்குகள் நாள் தோறும் ஓதி, பாராயணம் செய்துவந்ததோடு அவற்றைத் தமது சீடர்களான பிக்குகளுக்கும் கற்பித்து ஓதுவித்து வந்தனர். இவ்வாறு, புத்தரது அருள்வாக்குகள், எழுதப் படாமல் எழுதாமறையாக இருந்து, ஆசிரிய மாணவர் வழிமுறையாக நெடுங்காலம் ஓதப்பட்டுவந்தன.

விநயபிடகத்தை ஓதிய பிக்குகள் விநயதரர் என்றும், சூத்திரபிடகத்தை ஓதிவந்தவர் சூத்ராந்திகர் என்றும், அபிதம்மபிடகத்தை ஓதிவந்தவர் அபிதம்மிசர் என்றும் பெயர் வழங்கப்பட்டனர். * அன்றியும், இப்பிடகங்களை ஓதிய பிக்குகளில் பல உட்பிரிவினரும் இருந் தனர். அவ்வுட்பிரிவினர், பிடகங்களின் உட்பிரிவுகளை மட்டும் ஓதிவந்தனர். உதாரணமாகக் கூறுவாம்: புத்தரது சீடர்களில் ஒருவராகிய ஆநந்தரைத் தலைவராகக்கொண்ட பிக்குகள், சூத்திரபிடகத்தின் ஒரு பிரிவாகிய தீகநிகாயப் பகுதியை ஓதிப் பாராயணம் செய்துவந்தனர். மற்றொரு சீடராகிய சாரிபுத்தரைத் தலைவராகக்கொண்ட பிக்குகள் மஜ்ஜிம நிகாயப் பகுதியை ஓதிவந்தனர். மகாகாசிபரைத்

---

* இவ்வாறு திரிபிடகங்களைப் பாராயணம் செய்துவந்த பிக்கு களுக்குப் பாணகர் (Bhanaka) என்பது பெயர். தீகபாணகர், மஜ்ஜிம பாணகர், சம்யுக்த பாணகர், அங்குத்தர பாணகர், ஜாதக பாணகர், தம்மபதப் பாணகர் முதலிய பெயர்களைப் பௌத்தமத உரை நூல் களில் காணலாம். (திரிபிடக நூலைப் பாராயணம் செய்த பௌத்த பிக்குகளாகிய இந்தப் பாணகரையும், தமிழ்நாட்டிலே பண்டைக் காலத்தில் யாழ்வாசித்து இசை பயின்ற பாணர் என்பவர்களையும் பெயர் ஒற்றுமைகொண்டு, இருவரும் ஒருவரே என மயங்கக் கூடாது.)

தலைவராகக்கொண்ட பிக்குகள் சம்யுக்த நிகாயப் பகுதியையும், அநுருத்தரைத் தலைவராகக்கொண்ட பிக்குகள் அங்குத்தர நிகாயப் பகுதியையும் பாராயணம் செய்து வந்தார்கள்.

பௌத்த மதத்தில், பிற்காலத்திலே பிளவுகள் ஏற்பட்டுப் பிரிவுகள் உண்டாயின. புத்தர் வீடுபேறடைந்து நூற்றுப்பத்தாண்டுகளுக்குப் பின்னர், பிக்ஷு சங்கத்தில் புதிதாகத் தோன்றிய சில பழக்கவழக்கங்களைக் கண்டிக்கும்பொருட்டு, வைசாலி நகரத்தில் 700 பிக்குகள் மகாநாடு கூடி எட்டுத் திங்கள்வரை ஆராய்ந்து, புதிய வழக்கங்களைக் கூடாதென்று தடுத்தார்கள். கண்டிக்கப்பட்ட 10,000 பிக்குகள் ஒருங்குசேர்ந்து தனிப் பிரிவாகப் பிரிந்து போயினர் என்று தீபவம்சம் என்னும் நூல் கூறுகிறது. புத்தரது பழைய கொள்கைகளைப் பின்பற்றிவரும் பௌத்தமதத்துக்குத் தேரவாத பௌத்தம் என்றும், (இதற்கு ஹீனயானம் என்று தவறாகப் பெயர் வழங்குகிறது.) புத்தர்காலத்தில் இல்லாத புதிய கொள்கைகளைக் கொண்ட பௌத்தமதத்திற்கு மகாயான பௌத்தம் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இவ்விரு பெரும்பிரிவுகளிலும் அநேக உட்பிரிவுகள் உண்டு.

இலங்கைத்தீவிலே, கி. மு. மூன்றாம் நூற்றாண்டுமுதல் நாளதுவரையில், பழைய தேரவாத பௌத்தம் நிலைபெற்றுள்ளது. இத்தீவிலேயும் கி. மு. முதல் நூற்றாண்டிலே புதிய கொள்கைகள் பௌத்தமதத்தில் புகத்தொடங்கின. ஆகவே, தேரவாத பௌத்த பிக்குகள் ஒருங்குகூடி, ஆதிக் கொள்கைக்குப் புறம்பான புதிய கொள்கைகள் திரிபிடகத்தில் நுழையாதபடி போற்றவேண்டும் என்னும் கருத்தோடு, அதுவரையும் எழுதாமறையாக இருந்த திரிபிடகத்தை நூல்வடிவமாக எழுதினார்கள். இலங்கைத்தீவை கி. மு. 29 முதல் 17 வரையில் அரசாண்ட வட்டகாமினி அபயன் என்னும் அரசன் காலத்தில் திரிபிடகம் முதல்முதல் நூல் வடிவமாக எழுதப்பட்டது என்று மகாவம்சம் என்னும் நூல் (xxxiii. 100 - 101:) கூறுகிறது. இலங்கைத்தீவிலுள்ள

மலையநாட்டிலே, மாத்தளை என்னும் ஊருக்கருகிலிருந்த ஆலோக (அலு) விகாரை என்னும் பௌத்தப் பள்ளியிலே, திரிபிடகம் பொற்றகட்டில் எழுதப்பட்டு அவ்விகாரையில் ஒரு கற்பாறையின்கீழ் சேமித்து வைக்கப்பட்டதென்று கூறப்படுகிறது.

திரிபிடகம், நூல்வடிவாக எழுதப்பட்ட பிறகும், நெடுநாள்வரையில் வாய்மொழியாக ஓதும் பழக்கம் வழக்காற்றில் இருந்துவந்தது. பின்னர் அவ்வழக்கம் கைவிடப்பட்டது.

பிடகம் என்றால் கூடை என்பது பொருள். எனவே, திரிபிடகம் என்றால், மூன்று கூடை என்று பொருள்படும்; அஃதாவது மூன்று தொகுப்பு என்பது கருத்து. பிடகத்தைப் பிடக்கு என்று தேவாரம் கூறுகிறது. திரிபிடகம் பாலிமொழியில் எழுதப்பட்டிருக்கிறது. தொன்றுதொட்டு புத்தரைப் பின்பற்றி வருகிற தேரவாத பௌத்த நூல்கள் எல்லாம் பாலிமொழியிலேயே எழுதப்பட்டுள்ளன. (பிற்காலத்தில் உண்டான மகாயான பௌத்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டவை.) பிடகங்களும் அவற்றின் பிரிவுகளும் வருமாறு:

1. **விநயபிடகம்.** இரண்டு பிரிவுகளையுடையது. அவை: 1. விநயபிடகம். 2. பாதிமோக்கம் என்பன.

2. **சூத்திர பிடகம்.** ஐந்து பிரிவுகளையுடையது. அவை: 1. தீக நிகாய. 2. மஜ்ஜிம நிகாய. 3. ஸம்யுக்த நிகாய. 4. அங்குத்தர நிகாய. 5. குட்டக நிகாய என்பன.

ஐந்தாவது பிரிவாகிய குட்டக நிகாயம் பதினைந்து உட்பிரிவுகளையுடையது. அவ்வுட்பிரிவுகளாவன:

1. குட்டக பாதம். 2. தம்ம பதம். 3. உதானம். 4. இதிவுத்தகம். 5. ஸுத்தநிபாதம். 6. விமான வத்து. 7. பேதவத்து. 8. தேரகாதை. 9. தேரிகாதை.

10. ஜாதகம். 11. (மகா) நித்தேசம். 12. படிஸம்ஹித மக்கா. 13. அபதானம். 14. புத்த வம்ஸம். 15. சரியா பிடகம் என்பன.

3. அபிதம்ம பிடகம். ஏழு பிரிவுகளையுடையது. அவை:
1. தம்மஸங்கணீ. 2. விபங்கம். 3. கதாவத்து. 4. பஞ்ஞத்தி அல்லது பண்ணத்தி (புக்கல பஞ்ஞத்தி.) 5. தாதுகதை. 6. யமகம். 7. பட்டானம் என்பன.

திரிபிடக நூல்களுக்குப் பிற்காலத்திலே உரையாசிரியர்கள், பாலிமொழியிலே உரைகளை எழுதியிருக்கிறார்கள். அவ்வுரைகள் நாளதுவரையில் தேரவாத பௌத்தர்களால் பயிலப்பட்டு வருகின்றன. அவ்வுரைகளாவன:—

| பிடக நூலின் பெயர். | உரையாசிரியர் பெயரும், உரை நூலின் பெயரும. |
|---|---|
| I. விநயபிடகம். | |
| 1. விநயபிடகம் — | ஆசாரிய புத்தகோஷர், ஸமந்தபாஸாதிக என்னும் உரையை எழுதினார். |
| 2. பாதிமோக்கம்— | ஆசாரிய புத்தகோஷர், கங்கா விதரணீ என்னும் உரையை எழுதினார். |

II. சூத்திரபிடகம்.

| | | |
|---|---|---|
| 1. தீக நிகாய | —ஸுமங்கள விலாஸினீ | ஆசாரிய புத்த கோஷர். |
| 2. மஜ்ஜிம நிகாய | —பபஞ்சஸூடனீ | |
| 3. ஸம்யுக்த நிகாய | -ஸாரத்த பகாஸினீ | |
| 4. அங்குத்தர நிகாய | —மனோரதபூரணீ | |
| 5. குட்டகநிகாய:— | | |
| 1. குட்டகபாதம் | —பரமார்த்த ஜோதிகா | ஆசாரிய புத்தகோஷர். |
| 2. தம்மபதம் | —தம்மபதாட்டகதா | |
| 3. உதான | —பரமாத்த தீபனீ | ஆசாரிய தர்மபால மகாதேரர் (தமிழர்.) |
| 4. இதிவுத்தக | — ,, | |

5. சுத்தநிபாத-பரமாத்தஜோதிகா-ஆசாரிய புத்தகோஷர்
6. விமானவத்து—பரமார்த்த தீபனீ
7. பேதவத்து — ,,
8. தேரகாதா — ,,
9. தேரிகாதா — ,,

(6–9: ஆசாரிய தம்மபால மகாதேரர் (தமிழர்.))

10. ஜாதக—ஜாதகாத்தகதா—ஆசாரிய புத்தகோஷர்.
11. நித்தேச—ஸத்தம்ம பஜ்ஜோதிகா என்னும் உரையை உபசேனர் இயற்றினார்.
12. படிஸம்பிதாமக்கா — ஸத்தம்ம பகாஸினீ என்னும் உரையை மகாநாமர் என்பவர் இயற்றினார்.
13. அபதான — விஸுத்தஜன விலாஸினீ. இவ்வுரையாசிரியர் பெயர் தெரியவில்லை.
14. புத்தவம்சம் — மதுராத்த விலாஸினீ என்னும் உரையை ஆசாரிய புத்ததத்ததேரர் இயற்றினார். (சோழநாட்டுத் தமிழர்.)
15. சரியாபிடக—பரமார்த்த தீபனீ. ஆசாரிய தம்மபால மகாதேரர். (தமிழர்.)

## III. அபிதம்ம பிடகம் :

1. தம்ம ஸங்கணீ —அத்தஸாலினீ
2. விபங்க —ஸம்மோஹ விநோதனீ
3. கதாவத்து
4. புக்கல பஞ்ஞத்தி
5. தாதுகதா
6. யமகம்
7. பட்டானம்

(3–7: பஞ்சப்பகரண அட்டகதா)

(1–7: ஆசாரிய புத்தகோஷர்.)

இதுகாறும் கூறப்பட்டவை பழைய பௌத்தமாகிய தேரவாத பௌத்த நூல்கள். இவையன்றி, இன்னும் சில நூல்கள் தேரவாத பௌத்தத்தில் உள்ளன. விரிவஞ்சி அவற்றை இங்குக் கூறாமல் விடுகின்றோம். தேரவாத பௌத்த நூல்கள் எல்லாம் பாலிமொழியிலே எழுதப்பட்டவை. பழைய தேரவாத பௌத்தத்தை, ஈனயானம் என்றும் கூறுவர்.

தேரவாத பௌத்தத்திலிருந்து, பிற்காலத்தில் பிரிவுண்டது மகாயான பௌத்தம். மகாயான பௌத்தர்கள், திரிபிடகத்தில் உள்ள சில பகுதிகளைத் தள்ளியும், கௌதம புத்தர் கூறாத வேறு சில கருத்துக்களைப் புகுத்தியும் தமது மதநூல்களை அமைத்துக்கொண்டனர். மகாயான பௌத்தர்கள் தமது மதநூல்களை வடமொழியில் எழுதிவைத்தனர். அந்நூல்களின் பெயர்களை, விரிவஞ்சி ஈண்டுக் குறிக்காமல் விடுகின்றோம்.

தமிழிலே, சிவஞான சித்தியார் (பரபக்கம்), நீலகேசி (2 முதல் 5-ஆவது சருக்கம் வரையில்) என்னும் நூல்களில் பௌத்த மதத் தத்துவங்கள் கூறப்பட்டு மறுக்கப்படுகின்றன. இவை முறையே சைவ, ஜைன மதத்தவரால் எழுதப்பட்டவை. மணிமேகலை 30-ஆவது காதையிலே தேரவாத பௌத்த தத்துவங்கள் விரிவாகக் கூறப்படுகின்றன. மணிமேகலையைத் தவிர, ஏனைய குண்டலகேசி முதலிய பௌத்தத் தமிழ் நூல்கள் இறந்துவிட்டன.

---

## ௩. பௌத்தமதத் தத்துவம்

"பேதைமை செய்கை உணர்வே அருவுரு
வாயில் ஊறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த இயல்பீ ராறும்
பிறந்தோர் அறியில் பெரும்பேறு அறிகுவர்
அறியார் ஆயின் ஆழ்நர கறிகுவர்." (மணிமேகலை)
(24-ஆம் காதை, 105—110. 30-ஆம் காதை, 45—50.)

பௌத்தமதத் தத்துவம் பன்னிரண்டு நிதானங்களை யுடையது. (நிதானம்=காரணம்.) பன்னிரண்டு நிதானங்களைத் தமிழில் பன்னிரு சார்பு என்பர். அவையாவன:

1. அவிஜ்ஜை. 2. ஸங்க்காரம். 3. விஞ்ஞானம். 4. நாமரூபம். 5. ஷளாயதனை. 6. பஸ்ஸ. 7. வேதனை. 8. தண்ஹா. 9. உபாதானம். 10. பவம். 11. ஜாதி. 12. ஜராமரணம்.

பாலிமொழிப் பெயர்களாகிய இவற்றைச் சீத்தலைச் சாத்தனார் தமது மணிமேகலை என்னும் நூலிலே கீழ்க் கண்டவாறு தமிழ்ப் பெயரால் கூறுகிறார் :—

1. பேதைமை. 2. செய்கை. 3. உணர்வு. 4. அருவுரு. 5. வாயில். 6. ஊறு. 7. நுகர்வு. 8. வேட்கை. 9. பற்று. 10. பவம். 11. தோற்றம். 12. வினைப்பயன்.

இப்பன்னிரு சார்புகளின் தன்மைகளைச் சாத்தனார் மணிமேகலை 30-ஆம் காதையில் விளக்கியுள்ளார். இச் சார்புகளினாலே பிறப்பு இறப்பு உண்டாகின்றன. சார்பு களை அறுத்தால், பிறப்பு இறப்பு நீங்கி நிர்வாண மோக்ஷம் எனப்படும் வீடுபேற்றினை அடையலாம். இவற்றைப் பாலி மொழியில் உள்ள பிடகநூல்களில் கூறியுள்ளபடியே சாத்தனார் மொழிபெயர்த்துக் கூறியுள்ளார். விநயபிடகத் தின் மகாவக்கம் என்னும் பிரிவில் முதல் காண்டத்தில் கீழ்க்கண்டபடி கூறப்பட்டுள்ளது:

"அவிஜ்ஜா பச்சயா ஸங்க்காரா
ஸங்க்கார பச்சயா விஞ்ஞானம்
விஞ்ஞாண பச்சயா நாமரூபம்
நாமரூப பச்சயா ஸளாயதனம்
ஸளாயதன பச்சயா பஸ்ஸோ
பஸ்ஸ பச்சயா தண்ஹா
தண்ஹா பச்சயா உபாதானம்
உபாதான பச்சயா பவோ
பவ பச்சயா ஜாதி
ஜாதி பச்சயா ஜராமரணம்
ஸோக பரிதேவ துக்க தோமஸ் ஸுபாயாஸா ஸம்பவந்தி"

இத்திரிபிடக வாக்கியத்தைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்து, சாத்தனார் மணிமேகலையில் கூறுவது காண்க:

"பேதைமை சார்வாச் செய்கை யாகும்
செய்கை சார்வா உணர்ச்சி யாகும்
உணர்ச்சி சார்வா அருவுரு வாகும்
அருவுரு சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா ஊறா கும்மே
ஊறு சார்ந்து நுகர்ச்சி யாகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா கும்மே
பற்றிற் றோன்றும் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்
தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்காடு
அவலம் அரற்றுக் கவலைகை யாறெனத்
தவலில் துன்பந் தலைவரும் என்ப" (மணி. 30: 104-117)

இவ்வாறு துன்பத்திற்கு (பிறப்பிற்கு)க் காரணமான பன்னிரண்டு சார்புகளையும் கூறியபின்னர், பிறவாமையாகிய இன்பத்திற்குக் காரணத்தை விநயபிடகம், மகாவக்கம், முதற்காண்டம் மேலும் கீழ்வருமாறு கூறுகிறது:

"அவிஜ்ஜா யதுவேவ அஸேஸ
விராக நிரோதா ஸங்க்கார நிரோதோ
ஸங்க்கார நிரோதா விஞ்ஞான நிரோதோ
விஞ்ஞான நிரோதா நாமரூப நிரோதோ
நாமரூப நிரோதா ஸளாயதன நிரோதோ

## ஊழ் வட்டம் (தொடர்ச்சி)




இதில் மூன்று காலம், குற்றம், வினை, பயன் காட்டப்பட்டுள்ளன

# ஊழ் வட்டம்




இதில் பன்னிருசார்பு (நிதானம்), நான்கு கண்டம், மூன்று சந்தி, நோய், காரணம் இவை காட்டப்பட்டுள்ளன

—பக்கம் 15.

ஸளாயதன நிரோதா பஸ்ஸ நிரோதோ
பஸ்ஸ நிரோதா வேதனு நிரோதோ
வேதனு நிரோதா தண்ஹா நிரோதோ
தண்ஹா நிரோதா உபாதான நிரோதோ
உபாதான நிரோதா பவ நிரோதோ
பவ நிரோதா ஜாதி நிரோதோ
ஜாதி நிரோதா ஜராமரணம் ஸோக
பரிதேவ துக்க தோமஸ்ஸுபாயாஸா நிருஜ்ஜந்தி"

இதனை மொழிபெயர்த்துச் சாத்தனார் மணிமேகலையில் கூறுவது காண்க:

"பேதைமை மீளச் செய்கை மீளும்
செய்கை மீள உணர்ச்சி மீளும்
உணர்ச்சி மீள அருவுரு மீளும்
அருவுரு மீள வாயில் மீளும்
வாயில் மீள ஊறு மீளும்
ஊறு மீள நுகர்ச்சி மீளும்
நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளும், கருமத் தொகுதி மீளத்
தோற்றம் மீளும், தோற்றம் மீளப்
பிறப்பு மீளும், பிறப்புப் பிணிமூப்புச்
சாக்கா டவலம் அரற்றுக் கவலை
கையா றென்றிக் கடையில் துன்பம்
எல்லாம் மீளும்" (மணி. 30: 119-133)

இந்தச் சார்புகளை (நிதானங்களை) ஊழின் வட்டம் அல்லது ஊழ் மண்டிலம் என்பர். இவ்வூழ்வட்டம் சந்தி, கண்டம், காலம், குற்றம், வினை, பயன், நோய் காரணம் என்னும் உறுப்புக்களையுடையது. (படம் காண்க.)

"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்"

என்றபடி இச்சார்புகளை அறுத்து வீடு பெறுவதே பௌத்தர்களின் நிர்வாண மோக்ஷமாகும். வீடுபேறடைவதற்கு நான்கு உயர்ந்த உண்மைகளை (சத்தியங்களை) அறிய வேண்டும். நான்கு உண்மைகளாவன: 1. நோய் (துக்கம்), 2. நோய் காரணம் (துக்கோற்பத்தி), 3. நோய்

நீங்கும் வாய் (துக்க நிவாரணம்), 4. நோய் நீங்கும் வழி (துக்க நிவாரண மார்க்கம்) என்பன. இவற்றைச் சற்று விளக்குவோம்.

1. **நோய்:** பிறத்தல் துன்பம். பிணி, மூப்பு, சாக்காடடைவது துன்பம். அரற்று, கவலை, கையாறு இவை எல்லாம் துன்பந் தருவன. சுருங்கக்கூறின், புலன்களால் உண்டாகும் பற்றுக்கள் எல்லாம் துன்பம் தருவன என்று அறிதல் முதல் உண்மை.

> "உணர்வே அருவுரு வாயில் ஊறே
> நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே
> அவலம் அரற்றுக் கவலை கையாறெனு
> நுவலப் படுவன நோயாகும் மே."

(மணி. 30 : 179—182)

2. **நோய் காரணம்:** துன்பம் விளைவதற்குக் காரணமாக இருப்பவைகளை உணர்வது இரண்டாவது உண்மை.

> "அந்நோய் தனக்குப்
> பேதைமை செய்கை அவாவே பற்றுக்
> கரும வீட்டமிவை காரணம் ஆகும்."

(மணி. 30 : 183—185)

3. **நோய் நீக்கும் வாய்:** நோயையும் நோய்க்குக் காரணமாக இருப்பவைகளையும் நன்கறிந்து இவற்றிற்கு ஆசை (அவா) தான் காரணம் என்பதை நன்குணர்ந்து நோயினின்று விடுதலையடையும் வாயிலை அறிவது மூன்றாவது உண்மை.

> "துன்பம் தோற்றம்; பற்றே காரணம்
> இன்பம் வீடே, பற்றிலி காரணம்."

(மணி. 30 : 186—187)

என்னும் உண்மையை உறுதியாக உணர்தல் துக்க நிவாரணம் என்பது.

4. **நோய் நீக்கும் வழி:** துன்பத்தைப் போக்கி வீடுபேறாகிய நிர்வாண மோக்ஷத்தை யடைவதற்குரிய வழி யாது எனில், அஷ்டாங்க மார்க்கம் என்னும் எட்டு

வித ஒழுக்கத்தை மேற்கொண்டு ஒழுகுவதாகும் அஷ்டாங்க மார்க்கமாவன: (1) நற்காட்சி (ஸம்யக் திருஷ்டி) (2) நல்லூற்றம்; அதாவது நற்கருத்து. (ஸம்யக் சங்கல்பம்) (3) நல்வாய்மை (ஸம்யக் வாக்கு.) (4) நற்செய்கை (ஸம்யக் கர்மம்.) (5) நல்வாழ்க்கை (ஸம்யக் ஆஜீவம்.) (6) நல்லூக்கம் அதாவது நன்முயற்சி (ஸம்யக் வியாயாமம்) (7) நற்கடைப்பிடி (ஸம்யக் ஸமிருதி) (8) நல்லமைதி (ஸம்யக் சமாதி) இவற்றின் விளக்கத்தை விரிந்த நூலிற் காண்க.

இந்த அஷ்டாங்க மார்க்கத்தில் சீலம் (ஒழுக்கம்), சமாதி (தியானம்), பஞ்ஞா (ஞானம்) என்னும் மூன்றும் அடங்கும். இவற்றைச் சிறிது விளக்குவோம்.

சீலம்: இது பஞ்சசீலம், அஷ்டாங்க சீலம், தசசீலம் என மூன்று வகைப்படும். பஞ்ச சீலமாவது: (1) ஒருயிரையும் கொல்லாமலும் தீங்கு செய்யாமலும் இருத்தலோடு அவற்றினிடம் அன்பாக இருத்தல். (2) பிறர் பொருளை இச்சிக்காமலும் களவு செய்யாமலும் இருத்தல். (3) கற்புநெறியில் சிற்றின்பம் துய்த்தல், அதாவது, முறை தவறிய சிற்றின்பத்தை நீக்குதல். (4) உண்மை பேசுதல், பொய் பேசாதிருத்தல். (5) மயக்கத்தையும் சோம்பலையும் உண்டாக்குகிற மதுபானங்களை உட்கொள்ளாமை. இந்த பஞ்ச சீலங்கள் இல்லறத்தார்க்கு உரியன. இவற்றோடு, (6) இரவில் தூய்மையான உணவை மிதமாக உண்ணல், (7) பூ, சந்தனம், வாசனைச் சுண்ணம், எண்ணெய் முதலிய நறுமணங்களை நுகராமை, (8) பஞ்சணை முதலியவற்றை நீக்கித் தரையில் பாய்மேல் படுத்து உறங்குதல் என்னும் மூன்றையும் சேர்த்து அஷ்டசீலம் (எட்டு ஒழுக்கம்) என்பர். அஷ்டசீலம் இல்லறத்தாரில் சற்று உயர்நிலை யடைந்தவர் ஒழுகவேண்டிய ஒழுக்கங்களாகும். இவற்றோடு, (9) இசைப்பாட்டு, கூத்து, நாடகம் முதலிய காட்சிகளைக் காணுதிருத்தல், (10) பொன், வெள்ளி முதலியவற்றைத் தொடாதிருத்தல் ஆகிய இவை இரண்டும் சேர்ந்து தசசீலம் (பத்து ஒழுக்கம்) எனப்படும். தச

சீலம் துறவிகள் ஒழுகவேண்டிய ஒழுக்கமாகும். தசசீலத்தில் ஒழுகும் துறவி, சிற்றின்பத்தை அறவே ஒழிக்க வேண்டும். தசசீலங்களை மேற்கொண்டு, அடக்கமான பேச்சையும் அடக்கமான செயலையும் உடையவராய், உலகப் பற்றுக்களை நீக்கித் துறவறத்தை மேற்கொண்டவரே பிக்கு ஆவர். பிறகு,

சமாதி (தியானம்) என்பது, துறவறம் மேற்கொண்டு தச சீலங்களில் ஒழுகுகிற துறவியானவர், கைக்கொள்ள வேண்டிய ஒழுக்கம். விலக்கவேண்டிய தீய எண்ணங்களை நீக்கி, மனத்தை ஒருநிலையில் நிறுத்துவதே சமாதி அல்லது தியானம் என்பது. இதனால், ஐம்புலன்களினால் உண்டாகும் ஆசைகளும், பகை, கோபம், மறதி, ஐயம், அடக்கமின்மை முதலிய தீய குணங்களும் தடுக்கப்படுகின்றன; மனம் சாந்தநிலையை யடைகிறது. பிறகு,

பஞ்ஞா என்னும் ஞானநிலையில் ஒழுகவேண்டும். தியானமாகிய சமாதி யொழுக்கத்தினாலே, தீய எண்ணங்களும் மனோவுணர்ச்சிகளும் அழிக்கப்படாமல், செயலற்று அடங்கிக் கிடக்கின்றன. அவை, திடீரென எழும்பிவிடவும் கூடும். அவ்வாறு, அவை எழும்பிச் செயற்படாதவாறு, பஞ்ஞா அல்லது ஞானம் என்னும் நுண்ணறிவைக்கொண்டு அவற்றை அழிக்கவேண்டும். இந்த ஞானந்தான், பொருள்களை உள்ளது உள்ளவாறு உணரச்செய்து, மனோவுணர்ச்சிகளை அழியச்செய்கிறது. இந்த ஞானநிலையை யடைந்தவர் உலகத்தின் உண்மையான நிலையைக் காண்கிறார். அதனால்,

> "அநித்தம் துக்கம் அநான்மா அசுசி எனத்
> தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்" (மணி, 30 : 254-255)

என்றபடி உலகம் நிலையாமையுள்ளது, துன்பம் உடையது, அநாத்மிகமானது, அசுத்தமானது என்றுணர்ந்து பற்றற்று வீடடைகின்றார்.

பௌத்த மதத் தத்துவம் ஒருவாறு சுருக்கமாகக் கூறப்பட்டது. இது, தேரவாத பௌத்த தத்துவமாகும்.

---

## ௩. பௌத்தமதம் தமிழ்நாடு வந்த வரலாறு

கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் கௌதம புத்தரால் வட இந்தியாவில் தோன்றிய பௌத்தமதம், தென் இந்தியாவில் உள்ள தமிழ்நாட்டில் எப்போது வந்தது? இந்த மதத்தை முதல்முதல் இங்குக் கொண்டுவந்தவர் யாவர்? இவற்றைப் பற்றி இங்கு ஆராய்வோம்.

கடைச்சங்க காலத்திற்குப் பின்னர்தான், அதாவது கி. பி. மூன்றாவது நூற்றாண்டுக்குப் பிறகுதான், பௌத்த மதம் தமிழ்நாட்டில் வந்திருக்கக்கூடும் என்று சிலர் கருதுகின்றனர். இவ்வாறு இவர்கள் கருதுவதற்குக் காரணம் யாதெனில், கடைச்சங்க நூல்களில் பௌத்தமதத்தைப் பற்றிக் கூறப்படாததுதான். ஆனால், இவர்கள் கருத்து தவறெனத் தெரிகின்றது. பௌத்த மதத்தைப்பற்றிய குறிப்புகள் கடைச்சங்கத் தொகை நூல்களுட் காணப்படவில்லையாயினும், அச் சங்க காலத்து நூல்களில் காணப்படுகின்றன. அதாவது, கடைச்சங்க காலத்து நூல்களாகிய மணிமேகலை சிலப்பதிகாரம் மதுரைக்காஞ்சி என்னும் நூல்களில் இந்த மதத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளன. அன்றியும், பௌத்தமதப் புலவர்கள் இயற்றிய செய்யுள்கள் கடைச்சங்கத் தொகை நூல்களுட் காணப்படுகின்றன. மணிமேகலை என்னும் பௌத்த காவியத்தை இயற்றிய பௌத்தராகிய கூலவாணிகர் சாத்தனார் அருளிச்செய்த செய்யுள்கள் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் நூல்களுள் தொகுக்கப்பட்டுள்ளன. இளம்போதியார் என்பவரும் கடைச்சங்க காலத்திலிருந்த பௌத்தப்புலவர். இவரது பெயரே இவர் பௌத்தர் என்பதைத் தெரிவிக்கின்றது. (போதி = அரசமரம்; அரசமரத்தின் கீழே புத்தர் ஞானம் பெற்றபடியால், பௌத்தர் அரசமரத்தைத் தொழுவது வழக்கம்.) இந்த இளம்போதியார் இயற்றிய செய்யுள் ஒன்று நற்றிணை என்னும் கடைச்சங்கத் தொகை நூலில் ௭௨-ஆம் பாட்டாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே, கடைச்சங்க நூல்களில் பௌத்தப் புலவர்களின் செய்யுள்கள்

தொகுக்கப்பட்டிருக்கின்றபடியினாலே, அச் சங்க காலத்துக்குப் பிறகுதான் பௌத்தமதம் தமிழ்நாடு வந்திருக்கக்கூடும் என்பது தவறுகின்றது. கடைச்சங்க காலத்திலேயே, அதாவது, கி. பி. முதலாவது, அல்லது இரண்டாவது நூற்றாண்டிலேயே பௌத்தம் தமிழ்நாட்டில் இருந்தது என்பது நன்கு விளங்குகின்றது. ஆயினும், பௌத்த மதம் தமிழ்நாட்டிற்கு முதல்முதல் எப்போது வந்தது என்னும் கேள்விக்கு இது விடையன்று.

இக் கேள்விக்கு விடை தமிழ் நூல்களில் காணக் கிடைக்கவில்லை. ஆகையால், புறச்சான்றுகளைக்கொண்டு ஆராய்வோம். நற்காலமாக, அசோக சக்கரவர்த்தி எழுதுவித்துள்ள கல்வெட்டுச் சாசனங்களில் இரண்டு நமது ஆராய்ச்சிக்குப் பெரிதும் துணைசெய்கின்றன. அசோக சக்கரவர்த்தி மௌரிய மன்னர்களுள் தலைசிறந்தவர். கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் (கி. மு. 273 முதல் 232 வரையில்), தமிழ் இந்தியாவைத் தவிர ஏனைய இந்தியா முழுவதையும் ஒரு குடைக்கீழ் வைத்துலகாண்ட ஒப்பற்ற மன்னர். அன்றியும், இவர், பௌத்த மதத்தை மேற்கொண்டு, இந்தியா தேசத்திலும் அதற்கப்பாற்பட்ட தேசங்களிலும் இந்த பௌத்த மதத்தைப் பரவச்செய்தார். இவர் இந்தியா தேசத்தில் வெவ்வேறிடங்களில் எழுதுவித்துள்ள கல்வெட்டுச் சாசனங்களில் இரண்டு நமது ஆராய்ச்சிக்கு உதவி செய்கின்றன என்று சொன்னோம். சௌராஷ்டிர தேசத்திலுள்ள கிர்னார் நகரத்துக்கருகில் உள்ள பாறையொன்றில் எழுதப்பட்ட அசோக சாசனத்தில் (Edict ii) கீழ்க்கண்ட பகுதி காணப்படுகின்றது:—

> 'காருண்யமுள்ள தேவனாம்பிரியராகிய அரசர்பெருமானுடைய (அசோகருடைய) ஆட்சிக்குட்பட்ட எல்லாவிடங்களிலும், இவ்வெல்லைக்கு அப்பாற்பட்ட சோழ **பாண்டிய, சத்தியபுத்திர,** கேரளபுத்திர தேசங்களிலும், தாமிரபரணியிலும் (இலங்கை), யவன அரசனாகிய அண்டியொக்ஸ் ஆட்சிசெய்யும் தேசத்திலும், அதற்கப்பாற்பட்ட தேசங்களிலும் காருண்யமும் மேன்மையும் பொருந்திய அரசரால் இரண்டுவித மருத்துவ சிகிச்சைகள்

> ஏற்படுத்தப்பட்டன. அவை, மக்களுக்கு மருத்துவம், கால்நடைகளுக்கு மருத்துவம் என்னும் இருவகை மருத்துவ நிலையங்களாம்.'

இந்தச் சாசனத்தில், அசோக சக்கரவர்த்தி தமது நாட்டிலும், தமிழ்நாட்டிலும், ஏனைய நாடுகளிலும் மருத்துவ நிலையங்களை அமைத்தார் என்பதுமட்டும் கூறப்படுகின்றது. ஆனால், கீழ்க்கண்ட இன்னொரு சாசனத்தில், இவர் தமிழ்நாட்டில் பௌத்த மதத்தைப் பரப்பிய செய்தி காணப்படுகின்றது. பெஷாவர் நகரத்துக்கருகில் காணப்படுகின்ற இந்தச் சாசனம் (Rock Edict iii), போர்செய்து பலரைக் கொன்று அதனால் பெறும் மறவெற்றியைவிட, அறத்தைப் போதித்து அதனால் பெறும் அறவெற்றியே தமக்கு விருப்பமானது என்பதைத் தமது பிள்ளைக்கும் பேரப்பிள்ளைக்கும் அசோக மன்னர் தெரிவிக்கிற செய்தியைக் கூறுகின்றது. இவ்வாறு கூறுகின்ற இந்தச் சாசனத்தில் நமது ஆராய்ச்சிக்கு உதவிசெய்கின்ற பகுதியும் காணப்படுகின்றது. அது வருமாறு :—

> "தரும விஜயம் (அறவெற்றி) என்னும் வெற்றியே மாட்சிமிக்க அரசரால் (அசோக மன்னரால்) முதல்தரமான வெற்றியென்று கருதப்படுகின்றது. இந்த வெற்றி இந்த இராச்சியத்திலும், இதற்கப்பாற்பட்ட அறுநூறு யோசனைத் தூரத்திலுள்ள அண்டியொகஸ் என்னும் யவன அரசனுடைய தேசத்திலும், அதற்கும் அப்பால் டாலமி, அன்டிகொனஸ், மகஸ், அலெக்ஸாந்தர் என்னும் பெயருள்ள நான்கு அரசர்களின் தேசங்களிலும், இப்பால் தெற்கேயுள்ள சோழ, பாண்டிய, தாம்பிரபரணி (இலங்கை) வரையிலும் இந்த (அற) வெற்றி அடிக்கடி அரசரால் கைப்பற்றப்பட்டது.

இந்தச் சாசனம் கி. மு. 258-இல் எழுதப்பட்டது. அசோக மன்னர், தமிழ்நாட்டிலும், இலங்கையிலும் தரும விஜயத்தை—அதாவது, பௌத்த தருமத்தைப் போதித்து அதனைப் பரவச்செய்வதால் வந்த அறவெற்றியை—கைப்பற்றினார் என்னும் செய்தியை இச் சாசனம் தெரிவிக்கின்றது. இதன் திரண்ட பொருள் என்னவென்றால், அசோக சக்கரவர்த்தி தூதர்களை (பிக்ஷுக்களை) அனுப்பிப் பௌத்த

தருமத்தைத் தமிழ்நாட்டிலும் இலங்கையிலும் மற்றும் பல நாடுகளிலும் பரவச்செய்தார் என்பதே. சரித்திர ஆராய்ச்சியாளர் அனைவரும் இக் கருத்தையே இச் சாசனப்பகுதி விளக்குவதாகக் கூறுகின்றனர்.

அசோக மன்னர் காலத்தில்தான் பௌத்தமதம் தமிழ்நாட்டிற்கு வந்தது என்பதற்கு வேறுவிதமான புறச்சான்றும் கிடைக்கின்றது. 'மகாவம்சம்,' 'தீபவம்சம்' என்னும் பௌத்த நூல்கள் இலங்கையில் பௌத்தமதம் வந்த வரலாற்றினையும், அந்த மதத்தை இலங்கை அரசர் எவ்வாறு போற்றிப் பாதுகாத்துவந்தனர் என்னும் வரலாற்றினையும் விரிவாகக் கூறுகின்றன. இலங்கைத் தீவு தமிழ்நாட்டை யடுத்துள்ளதாகையாலும், தமிழ்நாட்டினைக் கடந்தே இலங்கைக்குச் செல்லவேண்டுமாகையாலும், இலங்கையில் பௌத்தமதம் வந்த அதே காலத்தில்தான் தமிழ்நாட்டிலும் பௌத்தமதம் வந்திருக்கவேண்டும் என்று துணியலாம். ஆகவே, தீபவம்சமும் மகாவம்சமும் என்ன கூறுகின்றன என்று பார்ப்போம். பாடலீபுரம் என்னும் நகரத்தில் அசோக சக்கரவர்த்தியின் ஆதரவில் மொக்கல புத்த திஸ்ஸ என்னும் தேரரின் தலைமையில் மூன்றாவது பௌத்த மகாநாடு கூடியதென்றும், ஒன்பது திங்கள் வரையில் அந்த மகாநாட்டில் பௌத்தமத ஆராய்ச்சி நடைபெற்றதென்றும், மகாநாடு முடிந்தபின்னர்ப் பௌத்த மதத்தைப் பரப்புவதற்காகப் பல பிக்குகள் பல்வேறு நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர் என்றும், இந்த நூல்கள் கூறுகின்றன.

காஸ்மீரம் காந்தாரம் என்னும் நாடுகளுக்கு மஜ்ஜந்திகர் என்னும் தேரரும், மகிஷ மண்டலத்துக்கு மகாதேவர் என்னும் தேரரும் அனுப்பப்பட்டனர். வனவாசி நாட்டிற்கு ரக்கிதர் என்னும் தேரரும், அபரந்தக தேசத்திற்குத் தம்மரக்கிதர் என்னும் தேரரும், மகாராட்ட தேசத்திற்கு மகாதம்மரக்கிதர் என்னும் தேரரும், யோன தேசத்திற்கு மகாரக்கிதர் என்னும் தேரரும் அனுப்பப்பட்டனர். இமாலயத்தைச் சேர்ந்த நாட்டிற்கு

மஜ்ஜிம என்னும் தேரரும், சுவன்னபூமி நாட்டிற்குச் சோணர், உத்தரர் என்னும் தேரர்களும் அனுப்பப்பட்டனர். பெரிய தேரராகிய மகிந்தரும் அவரது சீடர்களாகிய இட்டியர், உத்தியர், சம்பலர், பத்தசாலர் என்பவர்களும் இலங்கைத் தீவுக்கு பௌத்தமதத்தைப் பரவச்செய்ய அனுப்பப்பட்டனர். மகிந்தர் முதலியவர்கள், தாம் அடைந்திருந்த இருத்தியினாலே, ஆகாயவழியாகப் பறந்து இலங்கையை யடைந்தனர் என்று மகாவம்சம் என்னும் நூல் (12-ஆம் அதிகாரம்.) கூறுகிறது.

(இதில் கூறப்படுகிற காந்தாரதேசம் என்பது பஞ்சாப் தேசத்து வடபுறத்தில் உள்ள பெஷாவர், ராவல் பிண்டி என்னும் நாடுகளாகும். காஸ்மீரம் என்பது இப்போதுள்ள காஸ்மீரதேசம். மகிஷமண்டலம் என்பது இப்போதைய மைசூர்நாடு என்று கருதுவர் சிலர். ஆனால், விந்தியமலைக்குத் தெற்கில் இருந்ததும் மகிஷ்மதி என்னும் தலைநகரைக் கொண்டிருந்ததுமான மகிஷமண்டலம் என்னும் தேசமாகும் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். வனவாசி என்பது இப்போதைய வடகன்னட ஜில்லாவைச் சேர்ந்த பகுதி. இங்கு இப்போதும் பனவாசி என்னும் பட்டினம் இருக்கிறது. அபராந்தக (மேற்குக் கோடி) தேசம் என்பது குஜராத்து, கத்தியவார், கச்சு, சிந்து என்னும் நாடுகளைச் சேர்ந்த பாகம். மகாராட்டிரம் என்பது இப்போது மராட்டிபாஷை பேசுகிற மகாராட்டிர தேசம் ஆகும். யோனதேசம் என்பது யவன நாடு. இது இந்தியா தேசத்துக்கப்பால் வடமேற்குப் பக்கத்தில் உள்ள தேசம். இமாலயம் என்பது இமயமலைச் சாரலைச் சேர்ந்த நாடுகள். சுவர்ணபூமி என்பது பர்மா தேசம் என்று கருதுவர் சிலர். ஆனால், கர்ணசுவர்ண எனப்படும் வங்காளதேசம் என்றும், மத்திய இந்தியாவில் உள்ளதும் கங்கையாற்று ஒரு கிளையாக உள்ளதும் ஆன சோணைநதி (இரண்ய வாஹு) யைச் சூழ்ந்த நாடு என்றும் ஆராய்ச்சி வல்லார் கருதுவர். இலங்கை அல்லது தம்பபண்ணி (தாம்ரபரணி)என்பது இப்போதைய சிங்களத்தீவு ஆகும்.)

இவ்வாறு இந்தியாவிலும் அதற்கு அண்மையிலும் உள்ள நாடுகளுக்குப் பௌத்த பிக்ஷுக்களை அனுப்பிய மூன்றாவது பௌத்த சங்கம், தமிழ் நாட்டிற்கு பிக்ஷுக்களை அனுப்பியதாக இலங்கைநாட்டு நூலாகிய மகாவம்சம் கூறவில்லை. ஏன்? இதன் காரணம் என்ன? ஆனால், மேலே காட்டியபடி, அசோக சக்கரவர்த்தி எழுதியுள்ள கல்வெட்டுச் சாசனங்கள் இரண்டும் (Edits ii, and iii) தமிழ்நாட்டிலே பௌத்த பிக்ஷுக்கள் அனுப்பப்பட்டதாகக் கூறுகின்றன. அன்றியும், அசோக சக்கரவர்த்தியும் அவரால் அனுப்பப்பட்ட மகேந்திர தேரரும் கட்டிய விகாரைகளும் தூபிகளும் தமிழ் நாட்டிலே இருந்தன என்று வேறு சான்றுகள் தெரிவிக்கின்றன. யுவாங்சுவாங் என்னும் சீனநாட்டுப் பௌத்தர் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் இந்தியா முழுவதும் யாத்திரை செய்து பௌத்த சமய ஆராய்ச்சி செய்தார். அவர் எழுதியுள்ள தமது யாத்திரைக் குறிப்பில் கீழ்க்கண்ட செய்திகள் கூறப்படுகின்றன. (யுவாங் சுவாங் கி. பி. 640-இல் காஞ்சீபுரத்திற்கு வந்தார்.) காஞ்சீபுரத்திலே அசோக சக்கரவர்த்தியால் கட்டப்பட்ட நூறு அடி உயரம் உள்ள பௌத்த ஸ்தூபி இருந்ததையும், சோழ நாட்டிலே அசோக சக்கரவர்த்தி கட்டிய ஒரு பௌத்த விகாரை இருந்ததையும் இவர் குறிப்பிடுகிறார். அன்றியும், பாண்டிநாட்டின் தலைநகருக்கு (மதுரைக்கு) அருகிலே அசோக சக்கரவர்த்தியின் தம்பியாகிய மகேந்திரரால் கட்டப்பட்ட ஒரு சங்காராமம் (பௌத்த விகாரை) இருந்ததாகவும், அதற்குக் கிழக்கே அசோக சக்கரவர்த்தியால் கட்டப்பட்ட ஒரு ஸ்தூபி இருந்ததாகவும், இவை இரண்டும் இவர் காலத்தில் இடிந்து சிதைந்து புல்பூண்டு முளைத்துக் காணப்பட்டன என்றும் இவர் குறிப்பிடுகிறார்.*

பர்மாதேசத்துப் பௌத்தபிக்குப் பரம்பரையைக் கூறுகிற வரலாறு (Talaing Records) காஞ்சீபுரத்துக்கு அருகிலே பதரதிட்டை என்னும் இடத்தில் அசோக சக்கர

* Beal Records of the Western world ii, P. 231.

வர்த்தியால் கட்டப்பட்ட விகாரையில் தம்மபாலர் என்னும் பௌத்தபிக்கு வசித்திருந்தார் என்று கூறுகிறது. இந்தத் தம்மபாலர் என்பவர் பேர்போன ஆசாரிய தம்ம பாலர் ஆவர். இவர் தமிழ்நாட்டில் இருந்த தமிழ்ப் பௌத்த பிக்ஷு. இவர், பௌத்த வேதமாகிய திரி பிடகத்தின் சில பகுதிகளுக்குப் பாலி மொழியில் உரை எழுதியிருக்கிறார். இவர் கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவர். தாம் எழுதிய உரை நூல்களில் ஒன்றாகிய நெட்டி அட்டகதா என்னும் நூலில், அசோக சர்க்கரவர்த்தியால் கட்டப்பட்ட விகாரையில் தாம் தங்கி யிருந்து இந்நூலை எழுதியதாகக் கூறியிருக்கிறார்.

சிலப்பதிகாரத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த தாகக் கூறப்படுகிற இந்திரவிகாரை என்பது மகேந்திர தேரரால் கட்டப்பட்ட விகாரை என்று ஆராய்ச்சியாளர் கூறுகிறார்கள்.

இவ்வாறு அசோக சக்கரவர்த்தியின் சாசனங்களும், ஏனையோர் சான்றுகளும் தமிழ் நாட்டிலே அசோக சக்கர வர்த்தியும் அவர் அனுப்பிய மகேந்திரரும் கட்டிய விகாரை களும் தூபிகளும் இருந்த செய்தியைக் கூறுகின்றன. ஆகவே, ஏனைய நாடுகளுக்குப் பௌத்த பிக்ஷுக்கள் அனுப்பப்பட்டது போலவே தமிழ்நாட்டிற்கும் அனுப்பப் பட்டிருக்கவேண்டும். அவ்வாறு அனுப்பப்பட்டவர்கள், மகேந்திர தேரரும் அவருடன் வந்த பிக்ஷுக்களாகவும் இருக்கவேண்டும். ஆனால், இச்செய்திகளை இலங்கை நூலாகிய மகாவம்சம் ஏன் கூறாமல் மறைத்துவிட்டது? இதன் காரணம் யாது?

பண்டைக் காலத்தில் தமிழர் இலங்கைமேல் படை யெடுத்துச் சென்று அடிக்கடி அந்நாட்டைக் கைப்பற்றி அரசாண்டு வந்தபடியாலும், அடிக்கடி தமிழருக்கும் சிங் களவரான இலங்கையருக்கும் போர் நிகழ்ந்து வந்தபடி யாலும், மகேந்திரர் தமிழ் நாட்டில் பௌத்த மதத்தைப் போதித்த செய்தியை இலங்கை நூல்கள், பகைமை காரண மாகக் கூறாமல்விட்டன. மகத நாட்டிலிருந்து நேரடியாகப்

பௌத்தமதம் தமது இலங்கைத் தீவுக்கு வந்தது என்னும் பெருமையை யடைவதற்காக இலங்கை பிக்குகள் இதனை மறைத்து விட்டார்கள் என்று வின்செண்ட் ஸ்மித் என்பவர் கூறுகிறார்.*

இவர் கருத்தையே ஆராய்ச்சிவல்லார் ஒப்புக்கொள்கின்றனர். வட இந்தியாவிலிருந்து தென் இலங்கைக்கு வந்த மகேந்திரர், கடல் வழியாகப் பிரயாணம் செய்திருக்க வேண்டும் என்றும், அவ்வாறு கடல் பிரயாணம் செய்தவர் இலங்கைக்குச் செல்லும் வழியில் உள்ளதும் அக்காலத்தில் பேர்பெற்று விளங்கியதுமான காவிரிப்பூம்பட்டினத்தில் தங்கியிருக்கக்கூடும் என்றும், அவ்வாறு தங்கியிருந்த காலத்தில் கட்டப்பட்டவைதாம் அந்நகரத்தில் இருந்தனவாகத் தமிழ் நூல்களில் கூறப்படும் இந்திர விகாரைகளென்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

பிக்ஷுக்கள் ஆகாய வழியாகப் பறந்து நேரே இலங்கைக்கு வந்ததாக மகாவம்சம் என்னும் இலங்கை நூல் கூறுகிறதென்றாலும், அசோகர் அனுப்பிய பௌத்த பிக்ஷுக்கள் இலங்கைக்குப் போகும் வழியில் தமிழ் நாட்டிலே தங்கி பௌத்த மதத்தைப் போதித்திருக்க வேண்டும் என்று கருதுவர் அரசாங்க சிலாசாசன ஆராய்ச்சியாளர்.†

இவ்வாறே கருதுவர் வேறு சிலரும்.‡

மகேந்திரர் நேரே இலங்கைக்கு ஆகாய வழியாகப் பறந்து சென்றார் என்று மகாவம்சம் என்னும் நூல் கூறுவது ஐயப்படுவதற்குரியது என்றும், தமிழ் நாட்டிற்கு வந்த பிறகுதான் மகேந்திரர் இலங்கைக்குச் சென்றிருக்க வேண்டும் என்றும் மற்றொரு ஆராய்ச்சியாளரும் கருது

* P. 45. Asoka. 3rd Edition by. Vincent A Smith.

† Ep. Rep. 1097. Page. 61.

* Asoka's Mission to ceylon and some connected problem by Jyotirmay Sen Indian Historical quarterly Vol. IV P, 667-678.

கிறார். அவர் கூறுவதன் சாரமாவது: அசோகருடைய இரண்டு (Rock Edicts ii and iii) சாசனங்களில் கூறப் படுகிற தம்பபன்னி (தாம்பிரபரணி) என்பது தம்பபன்னி தீவாக (இலங்கைத் தீவாக) இருக்கவேண்டும் என்பதில்லை. அது தாம்பிரபரணி பாய்கிற, தற்போது திருநெல்வேலி என்று வழங்கப்படுகிற ஜில்லாவாகும். யுவாங் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் கூறுகிற மலயகூடம் என்னும் தேயமும் இதுவாகும். இங்கிருந்து படகேறிச் சிறிது தூரத்தைக் கடந்தால் தம்பபன்னிக்கு (இலங்கைக்குச்) செல்லலாம்.*

பாண்டியநாட்டில் மதுரை ஜில்லாவில் சில குகைகள் காணப்படுகின்றன. இக் குகைகளில் பிக்குகள் படுத் துறங்குவதற்காகப் பாறையில் செதுக்கி யமைக்கப்பட்ட படுக்கைகளும் அப் படுக்கையின்கீழ்ச் சில எழுத்துக்களும் காணப்படுகின்றன. இக் கற்படுக்கைகளின் அமைப்பு முதலியவை, இலங்கைத் தீவில் பௌத்தத் துறவிகள் தங்கு வதற்காகப் பண்டைக்காலத்தில் அமைக்கப்பட்ட குகையி லுள்ள படுக்கைகள் முதலியவற்றின் அமைப்பை ஒத்திருக் கின்றன. பௌத்தத் துறவிகள் ஊருக்குள் வசிக்கக் கூடாதென்பது அம் மதக் கொள்கையாதலால், அவர்கள் வசிப்பதற்காக மலைப் பாறைகளில் குகைகள் அமைப்பது பண்டைக்காலத்து வழக்கம். இலங்கையிலும் பாண்டி நாட்டிலும் காணப்படும் இந்தக் குகைகளின் அமைப் பைக்கொண்டு இவை பௌத்தத் துறவிகள் தங்கு வதற்கென அமைக்கப்பட்டவை என்றும், இப்பாண்டி நாட்டுக் குகைகளில் காணப்படும் எழுத்துக்களைக்கொண்டு (இவை அசோகர் காலத்துக் கல்வெட்டுச் சாசனங்களில் காணப்படும் பிராமி எழுத்தை ஒத்திருப்பதால்), இவை கி. மு. மூன்றும் நூற்றுண்டில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் ஆராய்ச்சி வல்லவர் கூறுகின்றனர். இவ்வாறு காணப்படும் பாண்டிநாட்டுக் குகைகளில் ஒன்று

* Page 60, 62, on the Chronicles of Ceylon by Bimala Chrun Law.

அரிட்டாபட்டி என்னும் கிராமத்துக்கருகில் இருக்கின்றது. 'அரிட்டாபட்டி' என்னும் பெயர், பௌத்த மதத்தைப் பரவச்செய்ய மகேந்திரருக்கு உதவியாயிருந்த அரிட்டர் என்னும் பிக்குவை நினைவூட்டுகின்றது. இந்த அரிட்டர் என்னும் பௌத்த முனிவர் இங்குள்ள குகையில் தமது சீடருடன் வாழ்ந்திருக்கக்கூடும் என்றும், ஆனதுபற்றியே இக்குகைக்கருகில் உள்ள சிற்றூர் 'அரிட்டாபட்டி' என்று வழங்கலாயிற்று என்றும் கூறுவர். மகாவம்சம் என்னும் நூல் மகா அரிட்டர் என்பவர் மகிந்தருடன் சேர்ந்து பௌத்த மதத்தைப் பரப்பினார் என்று சொல்வதைப் பாண்டிநாட்டில் உள்ள 'அரிட்டாபட்டி' என்னும் பெயரும் அங்குள்ள குகைகளும் வலியுறுத்துகின்றன.

மேலே எடுத்துக்காட்டிய சான்றுகளினாலே, யாம் முதலில் கேட்ட கேள்விகளுக்கு விடை கிடைக்கப்பெற்றோம். அதாவது, தமிழ்நாட்டில் பௌத்தமதம் எந்தக் காலத்தில் வந்தது? இந்த மதத்தைக் கொண்டுவந்து இங்குப் புகுத்தியவர் யாவர்? என்னும் வினாக்களுக்கு, கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்த மதம் தமிழ்நாட்டில் வந்ததென்றும், இதனை இங்குக் கொண்டுவந்து புகுத்தியவர் அசோக மன்னரும் அவரது உறவினராகிய மகேந்திரரும்* மற்றும் அவரைச் சேர்ந்த பிக்குகளுமாவார் என்றும் விடை கண்டோம்.

---

* இந்த மகிந்தர் (மகேந்திரர்) அசோக சக்கரவர்த்தியின் மகனார் என்று இலங்கை நூல்கள் கூறுகின்றன. இந்தியாவில் உள்ள நூல்கள் இவரை அசோகமன்னருடைய தம்பியார் என்று கூறுகின்றன. மகனார் ஆயினும் ஆகுக; தம்பியார் ஆயினும் ஆகுக. இவர் அசோகமன்னருடைய உறவினர் என்பதுமட்டும் உறுதி.

## ரு. பௌத்தமதம் தமிழ்நாட்டில் வளர்ச்சிபெற்ற வரலாறு

பௌத்தமதம் வடநாட்டினின்று தென்னாட்டிற்கு எந்தக்காலத்தில் வந்ததென்பதை முன் அதிகாரத்தில் ஆராய்ந்தோம். இந்த மதம் தமிழ்நாட்டில் எவ்வாறு பரவியது என்பதனை ஈண்டு ஆராய்வோம்.

இந்த மதம் உலகமெங்கும் பரவுவதற்குக் காரணமாயிருந்தது சங்கம். 'சங்கம்' என்றால் பௌத்த பிக்ஷுக்களின் கூட்டம். பௌத்த மதத்தில் 'மும்மணி' என்று சொல்லப்படும் புத்த, தன்ம, சங்கம் என்னும் மூன்றனுள் இம்மதத்தின் உயிர்நிலையாயிருந்தது சங்கமே. சங்கத்தின் அங்கத்தினரான தேரர்கள் நாடெங்குஞ் சென்று பௌத்த தர்மத்தை (கொள்கையை)ப் பரவச் செய்தபடியால், இந்த மதம் அந்தந்த நாட்டுமக்களால் மேற்கொள்ளப்பட்டு மேலோங்கி நின்றது.

புத்தர் நிர்வாணம் அடைந்த பிறகு, அவரைப் பின்பற்றியொழுகிய பிக்ஷுக்கள் பற்பல நாடுகளிலும் சென்று இம் மதக்கொள்கையைப் பரவச்செய்ததுபோலவே, தமிழ்நாட்டிலும் வந்து, நகரம் கிராமம் முதலிய எல்லாவிடங்களிலும் தமது மதக்கொள்கையைப் போதிப்பதையே தமது வாழ்நாட்களின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். தமிழ்நாட்டில் ஆங்காங்கிருந்த அரசர், வணிகர், செல்வந்தர் முதலானவர்களின் பொருளுதவி பெற்று விகாரைகளையும், பள்ளிகளையும், சேதியங்களையும், ஆராமங்களையும் ஆங்காங்கே நிறுவினார்கள். மடங்களில் வாழும் பௌத்தத் துறவிகள் மருத்துவம் பயின்று, தம்மிடம் வரும் பிணியாளர்களுக்கு இலவசமாக மருந்து கொடுத்துத் தொண்டு செய்துவந்தார்கள். அன்றியும், தமது பள்ளிகளில் பாடசாலைகளை அமைத்துச் சிறுவர்களுக்குக் கல்வியையுங் கற்பித்துவந்தார்கள். பௌத்தருக்குரிய நன்னாட்களில் நாட்டுமக்களைத் தமது பள்ளிக்கு அழைத்து, மணல் பரப்பிய முற்றங்களில் அமரச்செய்து, திரிபிடகம், புத்த

ஜாதகக் கதைகள், புத்தசரித்திரம் முதலான நூல்களை ஓதிப் பொருள் சொல்லியும் மக்களுக்கு மதபோதனை செய்துவந்தனர். மற்றும், குருடர், செவிடர், முடவர் முதலானவருக்கும், ஏழைகளுக்கும் உணவு கொடுத்துதவ அறச்சாலைகளை அரசர் செல்வந்தர் முதலானோர் உதவி பெற்று நிறுவினார்கள். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த கோவலன் மகள் மணிமேகலை என்பவள், பௌத்த மதம் புகுந்து துறவுபூண்டு, புகார்ப்பட்டினத்துக்கு அருகில் இருந்த சக்கரவாளக் கோட்டத்தைச் சேர்ந்த உலக அறவி என்னும் அம்பலத்தில் இருந்த குருடர், முடவர், பசிநோய்கொண்ட வறியவர் முதலியவர்களுக்கு உணவு கொடுத்து ஆதரித்த செய்தியை மணிமேகலை 17-ஆம் காதையினால் அறிகிறோம். அன்றியும், மணிமேகலை சிறைக் கோட்டம் சென்று சிறையில் வாடும் மக்களுக்கு உணவு கொடுத்து உண்பிக்க, அதனை அறிந்த சோழ அரசன் அவளை அழைத்து, நான் உனக்குச் செய்யவேண்டுவது என்ன என்று கேட்க, அவள், சிறைக்கோட்டத்தை அறக் கோட்டமாக்கவேண்டும் என்று கேட்க, அரசனும் அவ்வாறே சிறைக்கோட்டத்தை அறக்கோட்டமாக்கிக் கொடுத்தான் என்று மணிமேகலை 19-ஆம் காதையினால் அறிகிறோம். அவ்வறக்கோட்டம்,

"அரசன் ஆணையின் ஆயிழை அருளால்,
நிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டம்,
தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தால்
யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்,
பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலும்,
அருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியும்
அட்டிற் சாலையும் அருந்துநர் சாலையும்
கட்டுடைச் செல்வம் காப்புடைத் தாக"

ஆயிற்று என்று மணிமேகலை 20-ஆம் கதையினால் அறிகிறோம். இவ்வாறு நாட்டுமக்களுக்கு நலம் புரிந்துகொண்டே பௌத்தமதத்தின் கொள்கைகளையும் போதித்து வந்தபடியால், இந்த மதம் தமிழ் நாட்டிலும் நன்கு பரவி வளர்ந்தது.

இவையன்றியும், இந்த மதம் மேல்சாதி கீழ்சாதி என்று பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டாதபடியினாலும், எக்குடியிற் பிறந்தோராயினும், அன்னவர் கல்வி அறிவுகளிற் சிறந்தோராய்த் தம் மதக்கொள்கைப்படி ஒழுகுவாராயின், அவரையுந் தங்குருவாகக்கொள்ளும் விரிந்த மனப்பான்மை கொண்டிருந்தபடியினாலும், அக்காலத்தில் சாதிப்பாகுபாடற்றிருந்த தமிழர் இந்த மதத்தை மேற்கொண்டனர் என்றும் தோன்றுகின்றது. இச் செய்திகளெல்லாம் தமிழ் நூல்களிலும் பிற நூல்களிலும் ஆங்காங்கே காணப்படும் குறிப்புகளைக்கொண்டு அறியலாம். பௌத்தமதம் தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த செய்தி, சிலப்பதிகாரம், மணிமேகலை, தேவாரம், நாலாயிரப்பிரபந்தம், பெரியபுராணம், நீலகேசி முதலிய நூல்களினால் அறியக்கிடக்கின்றது.

---

## ௯. பௌத்தமதம் மறைந்த வரலாறு

பௌத்தமதம் தமிழ் நாட்டில் வந்த வரலாற்றினையும், அது பரவி வளர்ச்சியடைந்த வரலாற்றினையும், மேலே ஆராய்ந்தோம். செல்வாக்குப் பெற்றுச் சிறப்படைந் திருந்த அந்த மதம் பிற்காலத்தில் எவ்வாறு மறைந்துவிட் டது என்பதை இங்கு ஆராய்வோம்.

பௌத்தம் தமிழ்நாட்டுக்கு வந்த காலத்தில் வேறு வடநாட்டு மதங்களும் இங்கு வந்து சேர்ந்தன. அவை ஆருகதம் எனப்படும் ஜைன மதமும், பிராமண மதம் எனப் படும் வைதீக மதமும், பூரணன் என்பவரை வழிபட் டொழுகும் ஆசீவக மதமும் என்பன. (ஆசீவக மதத் தைப்பற்றி இந்நூல் இணைப்பில் காண்க.) இந்த மதங் கள் வடநாட்டில் தோன்றியவை. பௌத்த மதத்தை உண்டாக்கிய சாக்கிய புத்தரும், ஜைன மதத்தையுண்டாக் கிய வர்த்தமான மகாவீரரும், ஆசீவக மதத்தையுண்டாக் கிய கோசால மக்கலிபுத்திரரும் ஒரே காலத்தில் உயிர் வாழ்ந்திருந்தவராவர். இந்த மதங்கள் உண்டான காலத்திலே வைதீக மதமும் இருந்தது. இந்த நான்கு வடநாட்டு மதங் களும் கி. மு. மூன்றும் நூற்றாண்டிலே தமிழ் நாட்டிற்கு வந்தன. பௌத்தமதம் அசோக சக்கரவர்த்தி காலத்தில் தமிழ்நாட்டில் பரவச்செய்யப்பட்டது என்று அறிந்தோம். ஜைனமதம், அசோக சக்கரவர்த்தியின் பாட்டனை சந்திர குப்த அரசன் காலத்தில் தென்னாடு வந்ததாகச் சான்று கள் உள்ளன. சற்றேறக்தாழ இதே காலத்தில்தான் வைதீக பிராமண மதமும், ஆசீவக மதமும் தமிழ் நாட் டிற்கு வந்திருக்கவேண்டும். அக் காலத்தில், வடநாட்டு மதங்களினின்று வேறுபட்டதும் தனிப்பட்டதுமான ஒரு மதத்தைத் தமிழர் மேற்கொண்டிருந்தனர். வடநாட்டு மதங்களின் தொடர்பற்ற புராதன மதமாக இருந்தது அக் காலத்துத் தமிழர் மதம்.

வடநாட்டினின்று தென்னாடு போந்த மேற்கூறிய நான்கு மதங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட

கொள்கையுடையவை; ஒன்றோடொன்று பெரும்பகைக் கொண்டவை. இந்த மதங்கள் செற்றங்கொண்டு ஒன்றை யொன்று அழித்தொழிக்க அற்றம் பார்த்திருந்தன. அமைதியாக வாழத்தெரியாமல், ஒன்றையொன்று இழித்துப் பழித்துப்பேசி வந்தன. அமைதியாக இருந்த தமிழ் நாட்டில் இந்த வடநாட்டு மதங்கள் வந்து சமயப்பூசல் களைக் கிளப்பிவிட்டன. தமிழ் நாட்டுப் பெருங்குடி மக்களைத் தத்தம் மதத்தில் சேர்த்து, தத்தம் மதத்திற்குச் செல்வாக்கும் சிறப்பும் தேடிக்கொள்ள இந்த மதங்கள் முயற்சி செய்தன. பொதுமக்களின் அன்பையும் ஆதரவையும் பெறவும், அரசர்களையும் செல்வந்தர்களையும் வசப்படுத்திச் செல்வாக்கடையவும் இவை முயன்றன. தமிழர் கொண்டாடும் திருவிழாக்களையும் பண்டிகைகளையும் தக்க அமயமாகக்கொண்டு இந்த வடநாட்டு மதங்கள் தத்தம் கொள்கைகளைத் தமிழ்மக்களுக்குப் போதித்துவந்ததாகத் தெரிகின்றது. இவ்வித சமயப் போட்டியில் செற்றமும் கலகமும் ஏற்பட்டன. இந்தக் கலகங்களை அடக்க அரசன் தலையிடவேண்டியதும் ஆயிற்று.

'ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்;
பற்றா மாக்கள் தம்முட ணாயினும்,
செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்' (மணி. 1: 60-63)

என்று அரசன் திருவிழாக் காலங்களில் பறையறைவித்தான் என்பதை மணிமேகலை என்னும் காவியத்தினால் அறிகின்றோம். என்றாலும், சமயப்போர் நின்றபாடில்லை.

தமிழ் நாட்டில், செல்வாக்குப் பெறுவதற்காகப் போட்டியிட்ட நான்கு வடநாட்டுச் சமயங்களில் முதல் முதல் வெற்றிபெற்றுச் செல்வாக்கடைந்தது பௌத்த மதம். இந்தச் சமயம் செல்வாக்கடைந்த காரணத்தை முன் அதிகாரத்தில் கூறினோம். இச் சமயப் போட்டியில் முற்றும் பின்னடைந்துவிட்டது ஆசீவகமதம். ஆகவே, பௌத்தம், ஜைனம், வைதீகம் என்னும் மூன்று மதங்களுக்கு மட்டுந்தான் பிற்காலத்தில் சமயப்போர் நிகழ்ந்து

வந்தது. பௌத்தமதம் முதன்முதல் செல்வாக்கும் சிறப்பும் பெற்றுத் தமிழ்நாட்டில் விளங்கியது என்று கூறினோம். ஆனால், இதன் செல்வாக்கைக் கண்டு ஜைனமதமும் வைதிக சமயமும் பின்னடைந்துவிடவில்லை; இவை வாளா இராமல், பௌத்தத்தை எதிர்த்துத் தாக்கிய வண்ணமாய், அதன் வீழ்ச்சிக்கு வழி கோலிக்கொண்டேயிருந்தன. தனது நிலையைக் காத்துக்கொள்ளப் பௌத்தம் இந்த இரண்டு பிறவிப்பகையுடன் போராடவேண்டியிருந்தது. கடைசியாக, நாளடைவில், பௌத்த மதத்தின் வீழ்ச்சிக்கு வழியும் ஏற்பட்டுவிட்டது. ஜைனம், வைதிகம் என்னும் புறப்பகை ஒருபுறமிருக்க, அகப்பகையும் தோன்றி விட்டது. பௌத்தத்திற்குள்ளேயே சில பிரிவும் உண்டாயின. ஈனயானம், மகாயானம் என்னும் இரண்டு பெரும் பிரிவுகள் தோன்றி அவற்றினின்றும் உட்பிரிவுகள் பல கிளைத்து வளர்ந்தன. சிராவகயானம், மகாயானம், மந்திரயானம் என்னும் மூன்று பிரிவுகளை நீலகேசியுரையினால் அறிகின்றோம். 'ஐயுறுமமணரும், அறுவகைத் தேரரும்' என்று ஆறுவகைப்பிரிவினரான தேரர்கள் (தேரர் = பௌத்த பிக்குகள்) இருந்ததாகத் திருஞான சம்பந்தர் தமது தேவாரத்தில் கூறுகின்றார். இந்தப் பௌத்த உட்பிரிவினர் தமக்குள்ளேயே தர்க்கம் செய்து போரிட்டுக்கொண்டனர். இந்த உட்பிரிவுகளால் அந்த மதத்தின் வலிமை குன்றிவிட்டது. உடம்பில் தோன்றிய நோய் நாளடைவில் உடலையே அழித்துவிடுவதுபோல, இந்த உட்பிரிவுகளே பௌத்த மதத்தின் வீழ்ச்சிக்கு முதற் காரணமாயிருந்தன. அன்றியும், பொதுமக்களாலும் அரசர்களாலும் செல்வந்தர்களாலும் அளிக்கப்பட்ட செல்வத்தினால், பௌத்த விகாரைகளில் வசித்த பிக்ஷுக்கள் தங்கள் கடமையை மறந்து, செல்வத்தின் இன்பங்களைத் துய்க்கத் தொடங்கிவிட்டார்கள். ஆகவே, இவர்களிடத்தில் பொது மக்களிடமிருந்த மதிப்புக் குன்றவும், பௌத்தம் தன் செல்வாக்கினை இழக்க நேரிட்டது. இவைபோன்ற குற்றங் குறைகளும் உட்பிரிவுகளும் ஏற்படாமலிருந்தால், பௌத்த மதம் தனது புறப்பகை

மதங்களுடன் போரிட்டுக்கொண்டே இன்றளவும் ஓரளவு நிலைபெற்றிருப்பினும் இருக்கும். ஆயினும், குறைபாடுகளும் உட்பிரிவுகளும் ஏற்பட்டுவிட்டபடியால், அது புறப்பகையாகிய ஜைன வைதீக மதங்களுடன் போராட முடியாமல் வீழ்ச்சியடைந்துவிட்டது.

கி. பி. ஐந்தாவது, அல்லது ஆறாவது நூற்றாண்டிற்குப் பின்னர், பௌத்தத்தின் சிறப்புக் குன்றவும், ஜைன மதம் தலையெடுத்துச் செல்வாக்குப் பெறத் தொடங்கிற்று. ஆனால், அப்பொழுதும் வைதீக மதம் உயர்நிலை அடைய முடியாமலே இருந்தது. பௌத்த மத வீழ்ச்சிக்குப் பிறகு, ஜைன மதம் செல்வாக்குப் பெற்றது. பெற்றதும், தனது கொள்கைக்கும் வளர்ச்சிக்கும் பெருந்தடையாயிருந்த பௌத்தத்தை முன்னைவிடக் கடுமையாகத் தாக்கி, அதை நிலைகுலையச் செய்துவிட்டது. பௌத்தக் கோயில்கள் ஜைனக்கோயில்களாக மாற்றப்பட்டன. பௌத்த பிக்ஷுக்கள் வசித்த மலைக்குகைகள் ஜைனக்குகைகளாக மாற்றப்பட்டன. அகளங்கர் என்னும் ஜைனர், காஞ்சீபுரத்தில் உள்ள காமக்கோட்டத்தில், பௌத்தருடன் சமயவாதம் செய்து அவரைத் தோற்பித்துச் சிங்கள நாட்டிற்குத் துரத்திவிட்டார் என்னும் செய்தி பலர் அறிந்ததொன்றே. ஆனால், பௌத்தத்தை வீழ்ச்சியடையச்செய்து ஜைனம் வெற்றிக்கொடி நாட்டியபோதிலும், பௌத்தம் முழுவதும் அழிந்துவிடவில்லை. வலிமையிழந்த நிலையில் அந்த மதம் தமிழ் நாட்டில் ஓரளவில் ஊடாடிக்கொண்டிருந்தது.

இவ்வாறு மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகள் சென்றன. பிறகு, இதுகாறும் பின்னணியில் இருந்த வைதீக மதம் மெல்ல மெல்ல வலிமை பெறத்தொடங்கி, ஜைனமதத்தை வீழ்த்தி, உன்னத நிலையடையத் தொடங்கிற்று. இக் காலத்தில்தான் பௌத்த மதம் அடியோடு வீழ்ச்சியடைந்து முற்றும் மறைந்துவிட்டது.

வைதீக பிராமண மதம் யாகத்தில் உயிர்க்கொலை செய்யும் வழக்கத்தைக் கொண்டிருந்தபடியாலும், நால்வகைச்

சாதிப்பாகுபாடுடையதாய்ப் பிராமணர்மட்டும் உயர்ந்தவர் என்னும் கொள்கையுடையதாயிருந்தபடியாலும், இவற்றிற்கு மேலாக, பிராமணர் தவிர மற்றவர்கள் வேதத்தைப் படிக்கக்கூடாது என்று தடுத்துவந்தபடியாலும், இவ்விதக் குறுகிய கோட்பாட்டினையுடைய வைதீக மதத்தில் மக்களுக்கு மனம் செல்லவில்லை. ஆகவே, கி. மு. மூன்றாம் நூற்றாண்டில், தமிழ்நாடு வந்த வைதீக பிராமண மதம், கி. பி. ஆறாவது, அல்லது ஏழாவது நூற்றாண்டு வரையில், பொதுமக்களின் செல்வாக்குப் பெறாமல் ஒதுக்கப்பட்டே வந்தது. கி. பி. ஆறாவது, அல்லது ஏழாவது நூற்றாண்டுக்குப் பின்னர், வைதீக மதம் தனது அடிப்படையான கொள்கைகள் சிலவற்றில் மாறுதல் செய்துகொண்டு புத்துயிர் பெற்றது. அஃதாவது, யாகங்களில் உயிர்க்கொலை செய்வதை நிறுத்தியதோடு, கொற்றவை, முருகன், சிவன், திருமால் முதலான திராவிட (தமிழத்) தெய்வங்களைத் தன் மதக்கடவுளராக ஏற்றுக்கொண்டு புதிய உருவம் பெற்றுவிட்டது. இந்த மாறுதலுடன், 'பக்தி' இயக்கத்தை மேற்கொண்டபடியால், இந்த மதம் பொதுமக்கள் ஆதரவைப்பெறவும், பண்டைப் பகையுள்ள ஜைன பௌத்த மதங்களைக் கடுமையாகத்தாக்கித் தோற்பிக்கவும் முடிந்தது. சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர், திருமங்கையாழ்வார் போன்ற சைவ வைணவத் தொண்டர்கள் தோன்றிப் புதிய இந்து மதத்தை நிலைநாட்டவும், ஜைன பௌத்த மதங்களை ஒழிக்கவும் தலைப்பட்டார்கள். கி. பி. ஏழாம் நூற்றாண்டில், இந்தப் புதிய வைதீக இந்து மதம் ஜைன பௌத்த மதங்களுடன் போர் தொடங்கி வெற்றி பெற்றது. இந்து மதத்தின் வெற்றிக்குக் காரணம் யாதெனின், அக்காலத்தில் இந்து மதம் பிரிவினையின்றி ஒரே மதமாக இருந்ததேயாம். திருமால், சிவன் என்னும் இருதேவர் அதில் இருந்தபோதிலும், வைணவமதம் என்றும் சைவமதம் என்றும் பிற்காலத்துப் பிரிந்து நின்றதுபோல, அக்காலத்தில் இந்துமதம் பிரிந்திருக்கவில்லை. புதிய வைதீக மதம் ஜைன பௌத்த மதங்களுடன் போராடிய காலத்தில், வைணவம் சைவம் என்றும், வடகலை தென்கலை என்றும், வீரசைவம் சித்தாந்த

சைவம் என்றும், ஸ்மார்த்த மதம் என்றும் பல பகுதிகளாகப் பிரிக்கப்படவில்லை. ஆகவே, ஒற்றுமையுடன் போரிட்டபடியால், ஜைன பௌத்த மதங்களை அது வீழ்ச்சியடையச் செய்துவிட்டது; தமிழ் நாட்டில் ஜைன மதம் என்றும் தலைதூக்க முடியாதபடியும், ஏற்கனவே ஜைன மதத்தால் வலிமை குன்றியிருந்த பௌத்த மதம் அடியோடு ஒழியும்படியும் இதனால் நேர்ந்தது. சாத்தமங்கை முதலிய இடங்களில் சம்பந்தர் பௌத்தருடன் வாதப்போர் செய்து அவர்களைத் தோற்பித்துச் சைவராக்கிய வரலாறும், மாணிக்க வாசகர் சிதம்பரத்தில் பௌத்தருடன் வாதம் செய்து அவரை இலங்கைக்குத் துரத்திய வரலாறும், திருமங்கையாழ்வார் நாகைப்பட்டினத்துப் பௌத்த ஆலயத்திலிருந்த பொன்னால் அமைந்த புத்தச்சிலையைக் கவர்ந்து சென்று அந்தப் பொன்னைக்கொண்டு திருவரங்கத்தில் திருப்பணி செய்த வரலாறும் பௌத்த மதத்தின் வீழ்ச்சியைக் காட்டுகின்றன.

கலிகால சாகித்ய பண்டித பராக்கிரம பாகுஎன்னும் இலங்கை மன்னன், கி. பி. 1266-இல் சோளி (சோழ) தேசத்திலிருந்து பௌத்த பிக்ஷுக்களை இலங்கைக்கு வரவழைத்துப் பௌத்த மதத்தை வலியுறச்செய்தான் என்று இலங்கைச் சரித்திரத்தினால் அறியப்படுகின்றதாகலின், கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டிலும் தமிழ்நாட்டில் சோழ தேசத்தில் பௌத்த மதம் நிலைபெற்றிருந்தது என்று துணியலாம். கி. பி. பதினான்காம் நூற்றாண்டு வரையில் தமிழ் நாட்டின் சிற்சில இடங்களில் பௌத்தரும் பௌத்தப்பள்ளிகளும் இருந்துவந்தன. பின்னர், நாளடைவில், பௌத்தம் தமிழ் நாட்டில் மறைந்துவிட்டது. மறக்கவும்பட்டது. ஆனால், அதன் பெரிய கொள்கைகள் மட்டும் பல இன்னும் இந்துமதத்தில் போற்றப்பட்டு வருகின்றன.

---

# எ. பௌத்த திருப்பதிகள்

தமிழ்நாட்டிலே பண்டைக்காலத்திலே பௌத்த மதம் சிறப்பும் செல்வாக்கும் பெற்றிருந்தது என்பதை அறிந்தோம். பொதுவாகத் தமிழ்நாட்டில் சிறப்புப் பெற்றிருந்ததென்றாலும், சிறப்பாக எந்தெந்த நகரங்களிலும் ஊர்களிலும் செல்வாக்குற்றிருந்தது என்பதை ஈண்டு ஆராய்வோம். முதலில் சோழநாட்டில் இருந்த பௌத்த திருப்பதிகளைக் கூறுவோம்.

காவிரிப்பூம்பட்டினம்: சோழநாட்டில் பேர்பெற்ற துறைமுகப் பட்டினமும் சோழர்களின் தலைநகரங்களில் ஒன்றுமான காவிரிப்பூம்பட்டினம் பண்டைக் காலமுதல் பௌத்தர்களின் செல்வாக்குப் பெற்றிருந்தது. காவிரியாறு கடலில் கலக்கும் இடத்தில் அவ்யாற்றின் வடகரையில் அமைந்திருந்த இந்தத் துறைமுகப்பட்டினம் புகார் என்றும் பெயர் பெற்றிருந்தது. பாலிமொழியில் உள்ள பௌத்த நூல்களில் இப்பட்டினம் 'கவீரபட்டினம்' என்று கூறப்பட்டுள்ளது. மிகப் பழைமையானதென்று கருதப்படுகின்ற புத்த ஜாதகக் கதைகள் ஒன்றில் இந்த நகரம் டமிள (தமிழ) தேசத்தில் உள்ளதென்றும், அகத்தி அல்லது அகித்தி என்னும் முனிவர் தமது பெருஞ் செல்வத்தைத் தானஞ்செய்துவிட்டுத் துறவு பூண்டு காவிரிப்பூம்பட்டினத்தின் அருகில் இருந்த ஒரு வனத்தில் தங்கித் தவம் செய்தாரென்றும், அப்பெரியாரைக் கண்டு வணங்கப் பெருந்திரளான மக்கள் அங்குச் சென்று வந்ததால், அவரது தவத்துக்கு இடையூறுயிருந்ததுபற்றி அவர் அவ்விடத்தை விட்டு யாழ்ப்பாணத்துக்கருகில் உள்ள காரைத்தீவிற்குச் சென்று தவம் புரிந்தாரென்றும் கூறப்பட்டிருக்கின்றது. இந்த அகத்தி, அல்லது அகித்தி என்பவர் பௌத்த முனிவர்களில் ஒருவர்.

கி. மு. மூன்றும் நூற்றுண்டில், அசோக சக்கரவர்த்தியின் உறவினரான மகிந்தர், (மகேந்திரர்) என்பவர் இலங்கைக்குச் சென்று அங்குப் பௌத்தமதத்தைப் பரப்பு

வதற்கு முன், சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தில் தங்கி, அங்கு ஏழு புத்த விகாரைகளைக் கட்டினாரென்றும், மணிமேகலை சிலப்பதிகார நூல்களில் கூறப்படுகின்ற இந்திரவிகாரை என்பவை இவர் கட்டியவைகளே யென்றும், மகேந்திரர் கட்டிய அந்த விகாரைகளை இந்திரன் கட்டியதாக அந்த நூல்களில் கூறப்பட்டுள்ளதென்றும் சரித்திர ஆராய்ச்சியிற் சிறந்த அறிஞர்கள் கருதுகின்றார்கள். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இந்த விகாரைகளின் தலைவராக அறவண அடிகள் என்னும் தேரர் இருந்தார் எனத் தெரிகின்றது. இந்த ஏழு இந்திர விகாரைகளையன்றி, 'உவவனம்' என்னும் பூஞ்சோலையின் நடுவில், பளிங்கினால் அமைக்கப்பட்ட சிறு கோயில் ஒன்றில் புத்தரது பாதபீடிகை இருந்தது. இந்தப் பாத பீடிகையை அப் பட்டினத்தில் இருந்த பௌத்தர்கள் வணங்கிவந்தார்கள். அன்றியும், இப் பட்டினத்தின் முதுகாட்டினை அடுத்துச் 'சுடுகாட்டுக் கோட்டம்' என்று ஏனைய மதத்தோரால் கூறப்பட்டதும், 'சக்கரவாளக் கோட்டம்' என்று பௌத்தரால் போற்றப்பட்டதுமான ஒரு கோட்டம் இருந்தது. இக் கோட்டத்தினுள் 'சம்பாபதி' என்னும் பௌத்த தெய்வம் கோயில் கொண்டிருந்ததென்பதையும், அக்கோயிலின் தூணொன்றில் கந்திற்பாவை என்னும் தெய்வ உருவம் அமைந்திருந்ததென்பதையும், 'சக்கரவாளம்' என்னும் பௌத்தரது அண்டகோளத்தின் உருவம் இக் கோட்டத்தின் வாயிலில் அமைக்கப்பட்டிருந்ததென்பதையும் மணிமேகலை என்னும் நூலினால் அறிகின்றோம். சம்பாபதி கோயிலுக்குக் 'குச்சரக் குடிகை' என்றும், 'முதியாள் கோட்டம்' என்றும் வேறு பெயர்கள் வழங்கப்பட்டன.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் சோழ நாட்டினை அரசாண்ட கிள்ளிவளவன் என்னும் அரசன், பௌத்த மதத்தைச் சேர்ந்து துறவுபூண்ட மணிமேகலையின் வேண்டுகோளின்படி, சிறைச்சாலையை அறச்சாலையாக்கிக்கொள்ளும்படி அதனைப் பௌத்தர்களுக்குக் கொடுத்தான்



என்றும், அச் சிறைச்சாலைக் கட்டிடத்தைப் பௌத்தர்கள் அறச்சாலையாகவும் பௌத்தப் பள்ளியாகவும் அமைத்துக் கொண்டனர் என்றும் மணிமேகலை நூலினால் அறிகின்றோம். அறவண அடிகள், மணிமேகலை முதலிய பௌத்தர்கள் இவ்வூரில் இருந்தனர்.

'இரசவாகினி' என்னும் பாலிமொழியில் உள்ள பௌத்த நூலில், சோழ அரசன் ஒருவன் காவிரிப்பூம் பட்டினத்தில் சிவபெருமானுக்குக் கோயில் ஒன்று நிறுவினான் என்றும், அக் கோயிற்பணி நடைபெறும்போது சில பௌத்தத் துறவிகள் வந்து சில அதிசயங்களைச் செய்து அரசனுக்குக் காட்டி, அச் சிவன் கோயிலைப் பௌத்தக் கோயிலாக்கினார்கள் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

கி. பி. நாலாம் நூற்றாண்டில் அச்சுத விக்கந்தன் என்னும் களபர அரசனால் ஆதரிக்கப்பட்டவரும், தமிழ் நாட்டுப் பௌத்தப் பெரியார்களில் பேர் பெற்றவருமான புத்ததத்த தேரர் என்னும் பௌத்த ஆசாரியர், சோழ நாட்டையும் காவிரிப்பூம்பட்டினத்தையும் சிறப்பித்துக் கூறியிருக்கிறார். காவிரிப்பூம்பட்டினம் செல்வத தொகுதியும் மக்கட்கூட்டமும் நெருங்கிய இடம் என்றும், அப் பட்டினத்தில் இவர் தங்கியிருந்த பௌத்தப் பள்ளி **கணதாஸர்** என்பவரால் கட்டப்பட்டதென்றும், அப் பள்ளி நெடுஞ்சுவர்களால் சூழப்பெற்று பெரிய வாயில்களையுடையதென்றும், பள்ளிக் கட்டிடங்கள் பெரியனவாய் வெண் சுதை பூசப்பெற்றுக் கயிலாயம்போல் வெண்ணிறமாக விளங்கும் என்றும் தாம் எழுதிய **அபிதம்மாவதாரம்** என்னும் பாலிநூலில் இவர் எழுதியிருக்கிறார். இவ்வாறு இவர் சிறப்பித்துக் கூறுகிற செய்யுட்பகுதி சொற்சுவையும் பொருளழகும் ஓசையின்பமும் சிறந்துள்ளது என்று பாலி மொழியறிந்த பண்டிதர்கள் புகழ்ந்து பேசுகிறார்கள்: அப்பகுதி வருமாறு:

"நரநாரீ கணாகிண்ணே அவங்கிண்ணே குலாகுலே
பீதே ஸப்பங்க ஸம்பன்னே பஸன்னே ஸரிதோதகே
நாநாரதன ஸம்பன்னே விவிதாபண ஸங்கதே

காவேரிபட்டணே ரம்மே நாஞராமோ பஸோபிதே
கேலாஸ விகராகார பாஸாத பதிமண்டிதே
காரிதே கணதாஸேன தஸ்ஸனீய மஞேரமே
விஹாரே விவிதாகார சாருபாகார கோபுரே
தத்தா பாசீன பஸ்ஸே மயா நிவஸதா ஸதா
ரம்மஸல்லேக ஸாகல்ய ஸீலாதிகுண ஸோபிஞ
அயம் ஸு மதிஞ ஸாது யாசிதேன கதோகதோ"

அன்றியும், புத்தவம்சம் என்னும் நூலுக்கு இவர் எழுதிய மதுராத்தவிலாஸினீ என்னும் உரையின் இறுதியிலும் காவேரிப்பட்டினத்தில் கணதாசர் கட்டிய பௌத்த விகாரையைக் கீழ்வருமாறு குறிக்கிருர் :

"காவீர ஜல ஸம்பாத பரிபூத மஹீதலே
காவேரிபட்டணே ரம்மே நாஞ நாரீநராகுலே
காரிதே கணதாஸேன ஸணவாசேன ஸாதுஞ
விஹாரே விவிதாகார சாரு பாகார கோபுரே"

பூதமங்கலம் : இதுவும் சோழ நாட்டில் இருந்த பௌத்த ஊர்களில் ஒன்று. இவ்வூரில் வேணுதாசர் என்பவர் கட்டிய பௌத்தவிகாரையில், ஆசாரிய புத்த தத்ததேரர் தங்கியிருந்தபோது விநயவிநிச்சயம் என்னும் நூலை இயற்றினர். இந்த ஆசாரிய புத்ததத்ததேரர் சோழ நாட்டுத் தமிழர். தமது நூல்களில் சோழநாட்டையும் காவிரிப்பூம்பட்டினத்தையும் சிறப்பித்துக் கூறியது போன்று, இந்தப் பூதமங்கலம் என்னும் ஊரையும் சிறப்பாகக் கூறியுள்ளார் :

சோழநாட்டிற்குக் கொப்பூழ் (நாபி) போன்றிருந்த பூதமங்கலம் வாழை, தென்னை, பனைமரங்கள் அடர்ந்த சோலைகளாலும், அல்லி ஆம்பல் முதலிய நீர்ப்பூக்களால் நிரம்பப்பெற்ற குளங்களாலும் சூழப்பெற்றதென்றும், செழிப்பும் செல்வமும் பெருகிய இடம் என்றும், காவிரியாற்றின் நீர் பாயப்பெற்ற சோலைகளை யுடையதென்றும் அங்கு, அகழியால் சூழப்பெற்ற நெடுஞ் சுவர்களையுடைய வேணுதாசர் என்பவரால் அமைக்கப்பட்ட விகாரையில் தங்கியிருந்தபோது தாம் விநயவினிச்சயம் என்னும் நூலை எழுதியதாகவும் அழகுபடக் கூறுகிருர் :

"ஸெட்டஸ்ஸ சோளரட்டஸ்ஸ நாபிபூதே நிராகுலே
ஸப்பஸ்ஸ பன லோகஸ்ஸ காமே ஸம்பிண்டிதே விய
கதலீ ஸாலா தாலுச்சு நாளிகேர வனுகுலே
கமலுப்பல ஸஞ்சன்ன ஸலிலாஸய ஸோபிதே
காவேரி ஜலஸம்பாத பரிபூத மஹீதலே
இத்தே ஸப்பங்க ஸம்பன்னே மங்கலே பூதமங்கலே
பவராகார பாகார பரிகா பரிவாரிதே
விஹாரே வேணுதாஸஸ்ஸ தஸ்ஸனீய மனோரமே."

என்று அவர் கூறியிருப்பது காண்க.

ஆசாரிய புத்ததத்தர் கூறுகிற பூதமங்கலம் என்பது எந்த ஊர்? தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள பூதலூர் என்று சிலர் கருதுவர். இது தவறு. நித்தவிநோத வளநாட்டு வெண்ணிக்கூற்றத்து நகரம் வெண்ணி. இந்த வெண்ணி நகரத்துக்கு அடுத்து பூதமங்கலம் என்னும் ஊர் ஒன்று சோழநாட்டில் இருந்த செய்தி சாசனங்களால் தெரிய வருகிறது.*

தஞ்சை ஜில்லா மன்னார்குடி தாலுகா திருவிராமேச்சரம் என்னும் பாடல்பெற்ற கோயிலில் உள்ள ஒரு சாசனம், தென்மலிநாட்டு மேற்பூதமங்கலம் என்னும் நாட்டையும் அங்கிருந்த ஊர்க்காட்டு பகவதேவர் கோயிலையும் குறிப்பிடுகின்றது.* இதிலிருந்து பூதமங்கலம், மேற்பூதமங்கலம் கீழ்ப்பூதமங்கலம் என்று இருகூறுகப் பிரிக்கப்பட்டிருந்த செய்திதெரிகிறது. அன்றியும், பகவதேவர் கோயில் என்பது புத்தர் கோயிலாக இருக்க வேண்டும் என்றும் தெரிகிறது. புத்தருக்குப் பகவன் என்னும் பெயரும் உண்டு. மேற்கூறிய இரண்டு சாசனங்களிலும் காணப்படுகிற ஊர்தான் புத்ததத்தர் இருந்த பூதமங்கலம் ஆகும்.

திரு. மீனாட்சியம்மையாரும், இந்த ஊரைத்தான் புத்ததத்தர் குறிப்பிடுகிற பூதமங்கலம் என்று கூறுகிறார்.†

* S. I. I. No 5 Inscriptions of the Tanjore Temple, Vol. II, Part I

† 576. (143 of 1911) Topographical list, Vol. II.

இவர் தாம் நேரில் அவ்வூருக்குச்சென்று தாம் கண்ட செய்திகளைக் கூறுகிறார். இவர் கூறுவதாவது: ஆசாரிய புத்ததத்தர் இருந்த பூதமங்கலம் வெண்ணிக்கூற்றத்து வெண்ணிகரைச் சேர்ந்த பூதமங்கலம் ஆகும். தஞ்சாவூருக்குக் கிழக்கே 20 மைலுக்கப்பால் உள்ளதும், இப்போது கோயில் வெண்ணி என்று வழங்கப்படுகிறதும் ஆன இடம்தான் அது. இது மன்னார்குடி தாலுகாவில் இருக்கிறது. இப்போது, பூதமங்கலம் சிறு கிராமமாக இருக்கிறது. இதற்கு அடுத்துள்ள கிராமம் பள்ளிவிருத்தி என்று வழங்கப்படுகிறது. பள்ளிவிருத்தி என்பது பௌத்தப்பள்ளிக்காக விடப்பட்ட மானியம் என்று பொருள்படும். இப்போதுள்ள பூதமங்கலம், பள்ளிவிருத்தி என்னும் கிராமங்கள் பண்டைக்காலத்தில் பெரிய பட்டண மாக இருந்திருக்கவேண்டும். பூதமங்கலத்தில் செங்கற்க ளால் கட்டப்பட்டு அழிந்துபட்டுள்ள இரண்டு மேடுகளும், பள்ளிவிருத்தி கிராமத்தில் அவ்வாறே அழிந்து காணப் படுகிற மூன்று மேடுகளும் காணப்படுகின்றன. இந்த மேடுகளைத் தோண்டிப்பார்த்தால், இவற்றில் பௌத்தச் சின்னங்கள் ஏதேனும் கிடைக்கக்கூடும். இங்கு ஒரு புத்தர் உருவச்சிலை யிருந்ததென்றும், அதைத் தஞ்சாவூருக் குக் கொண்டுபோய் விட்டதாகவும் கூறுகிறார்கள். இவ் வூருக்கு அருகில் உள்ள மன்னார்குடியில் இருக்கிற ஜைனக் கோயிலில் புத்தர் உருவச்சிலையொன்று காணப்படுகிறது.

இந்தச் சான்றுகளினாலே, ஆசாரிய புத்ததத்தர் வசித் திருந்ததும், வேணுதாசர் கட்டிய விகாரை இருந்தது மான பூதமங்கலம் இந்த இடமாகத்தான் இருக்கக்கூடும் என்று கருதப்படுகிறது.

புத்த மங்கலம்: கேயமாணிக்க வளநாட்டு திருவாரூர் கூற்றத்துப் புத்தமங்கலம் என்னும் ஊர், பேராவூர், ஆதித்தியேசுவரர் கோயில் சாசனத்தில் கூறப்படுகிறது.†

* Bhutamangalam of Buddhadatha by C. Minakshi, P. 401. Current Sceince Vol. 6, 1937-38.

† 69 of 1925 Ep. Rep. 1907.

இது பௌத்தர் இருந்த ஊர் என்பது இப் பெயரே விளக்குகிறது.

சங்க மங்கலம்: ஜயசிம்ம குலகால வளநாட்டுத் தானவநாட்டுச் சோழசிகாமணி புரத்துக் கண்டியூரின் மேற்குப் பகுதியில், சங்கமங்கலம் என்னும் ஊர் இருந்ததாக ஒரு சாசனம் கூறுகிறது.* இப் பெயரே இது பௌத்தர்கள் ஊரென்று தெரிவிக்கிறது. (சங்கம்= பௌத்த பிக்குகளின் சங்கம்.) பௌத்தராக இருந்து சைவராகிச் சிவபெருமானைக் கல்லால் எறிந்து முத்திபெற்ற சாக்கிய நாயனார் பிறந்த ஊர் திருச்சங்கமங்கை என்று பெரியபுராணம் கூறுகிறது. இந்தச் சங்கமங்கலமும் சங்கமங்கையும் ஒரே ஊராக இருக்குமோ என்று ஐயம் உண்டாகிறது.

போதி மங்கலம்: திருவிடைக்கழி என்னும் ஊரில் உள்ள, சுப்பிரமணிய சுவாமி கோயில் சாசனம் ஒன்று, இவ்வூரைக் குறிப்பிடுகிறது.† பெரிய புராணத்தில், "சாக்கியர்தம் போதிமங்கை" என்று கூறப்படுவது இவ்வூராக இருக்கலாம். இப் பெயரே, இது பௌத்தர்களுடைய ஊர் என்பதைத் தெரிவிக்கிறது. இவ்வூரில், திருஞானசம்பந்தரும் பௌத்தர்களும் சமயவாதம் செய்தனர் என்று பெரியபுராணம் கூறுகிறது. திரிபுவன சக்கரவர்த்தி ராஜேந்திர சோழனுடைய 13-ஆவது ஆண்டில், குன்றத்து நாராயணன் என்பவர், இவ்வூரில் 5 வேலி நிலம் வாங்கி, திருவிடைக்கழி சுப்பிரமணியர் கோவிலுக்குத் தானம் செய்தார்.‡

திருவிளந்துறைக் கோயில்: இவ்வூர் கும்பகோணம் தாலுகாவில் உள்ளது. இவ்வூரில், கி. பி. 1580-இல், தீத்தமாயிருந்த நாயகர் கோயில் என்னும் புத்தக் கோயில் இருந்ததாகச் சேவப்ப நாயகர் காலத்தில் எழுதப்பட்ட சாசனம் ஒன்று கூறுகிறது.§

* 124 of 1935-36. Ep. Rep. 1935-36.
† 27 of 1925, Epi. Rep. 1907. ‡ 276 of 1925.
§ P. 116. Epi. Rep. 1926-27, P. 50. Epi. Rep. 1927-28.

கும்பகோணம்: நாகேசுவர சுவாமி திருமஞ்சன வீதியில் உள்ள ஒரு விநாயகர் ஆலயத்தில் பகவரிஷி என்னும் பெயருள்ள ஒரு புத்தர் உருவம் இருக்கிறது. பகவன் என்பது புத்தர் பெயர்களில் ஒன்று. புத்தருக்கு விநாயகன் என்னும் பெயர் உண்டென்று நிகண்டு நூல்கள் கூறுகின்றன. புத்தர் கோயில்கள் பல, பிற்காலத்தில் விநாயகர் (பிள்ளையார்) கோயில்களாக்கப்பட்டன. இங்குள்ள விநாயகர் கோயிலும் அதில் உள்ள புத்தர் உருவமும் இதற்குச் சான்றாகும்.*

திருவலஞ்சுழி: தஞ்சை ஜில்லாவில் உள்ள இவ்வூர் சிவன் கோயிலுக்கு வெளியே பெரியதோர் புத்தர் உருவம் அமைந்த கற்சிலை இருக்கிறது.†

பட்டீச்சரம்: தஞ்சை ஜில்லாவில் உள்ள இவ்வூர்க் கிராம தேவதை ஆலயத்தில் புத்தர் உருவச்சிலை யொன்று இருக்கிறது.‡

எலயனூர்: தஞ்சை ஜில்லாவில் நன்னிலம் தாலூகாவில் உள்ள இவ்வூரில் ஒரு புத்தர் உருவச்சிலை இருந்தது. அவ்வுருவம், இப்போது சென்னைப் பொருட்காட்சி சாலையில் கொண்டுவந்து வைக்கப்பட்டிருக்கிறது.

பொன்பற்றி: வீரசோழியம் என்னும் இலக்கண நூலை எழுதிய புத்தமித்திரர் என்னும் பௌத்தர் வாழ்ந்திருந்த ஊர் இது. சோழநாட்டு மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்திருந்த ஊர் என்று கூறப்படுகிறது. இப்போது இது பொன்பேத்தி என்று வழங்கப்படுகிறது. தஞ்சை ஜில்லா அறந்தாங்கி தாலுகாவில் உள்ளது.§

புத்தகுடி: சோழநாட்டில் நாகைப்பட்டினத்துக்கு அருகில் இருந்த ஊர். செயங்கொண்ட சோழவளநாட்டுக் குறும்பூர் நாட்டில் இவ்வூர் இருந்ததாகக் குலோத்துங்கச் சோழனது செப்புப் பட்டயம் கூறுகின்றது.¶

* P. 116. Epi. Rep. 1926-27. † S. I. Epi. Rep. 1928-29.
‡ (P. 58, Ep. Rep. 1926-27.) § P. 18, 19, Ep. Rep. 1899.
¶ Leiden grant.

இவ்வூரின் பெயரே, இது பௌத்தர்கள் குடியிருந்த ஊர் என்பதைத் தெரிவிக்கின்றது.

உறையூர்: பாலிமொழியிலும், வடமொழியிலும் இவ்வூர் உரகபுரம் என்று கூறப்படுகிறது. இவ்வூரில் இருந்தபோது ஆசாரிய புத்ததத்த தேரர் அபிம்மாவதாரம் என்னும் நூலை இயற்றினார் என அறிகிறோம். "உரகபுர நிவாஸிகேன ஆசாரியேன பத்தந்த புத்ததத்தேன கதோ அபிதம்மாவதாரோ நாமாயன்," என்று அந்நூல் இறுதியில் எழுதியிருப்பதனால் இதை யறிகிறோம். பண்டைக் காலத்தில் இங்குப் பௌத்தர்கள் இருந்ததாகத் தெரிகிறது.

பெருஞ்சேரி: மாயவரம்—திருவாரூர் ரயில்வேயில் உள்ள மங்கநல்லூர் நிலையத்திற்கு வடகிழக்கு ஒரு மைல் தூரத்தில் உள்ளது இவ்வூர். இங்கு 5'3" உயரமுள்ள, உட்கார்ந்திருப்பதுபோன்ற புத்தர் உருவச்சிலை ஒன்று இருக்கிறது. இச் சிலையின் பீடத்தில் தமிழ் எழுத்துச் சாசனம் அழிந்துபோய்க் காணப்படுகிறது. இப்போது இது இருக்கும் இடத்திற்கு ஒரு பர்லாங்கு தூரத்தில் உள்ள ஒரு தோப்பில் இவ்வுருவம் முன்பு இருந்தது.*

கோட்டப்பாடி: நன்னிலம் தாலுகாவில் அம்பகரத்தூர் ரயில் நிலையத்திலிருந்து மூன்று மைல் தூரத்தில் உள்ளது இவ்வூர். இங்கும் புத்தர் உருவச்சிலையொன்று இருக்கிறது.†

மயூரபட்டணம்: சூத்திரபிடகத்தின் ஒரு பகுதியாகிய மஜ்ஜிமநிகாய என்னும் பகுதிக்கு ஆசாரிய புத்ததத்ததேரர் (கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் தொடக்கம்) தாம் எழுதிய பபஞ்சசூடானீ என்னும் உரையின் இறுதியில், மயூரபட்டணத்தில் இருந்த புத்தமித்தர் என்னும் தேரரின் வேண்டுகோளின்படி இந் நூலை எழுதியதாகக் கூறுகிறார். மயூரபட்டணம் சில பிரதிகளில் மயூரரூபப் பட்டணம்

* P. 75, Arch. Surv. Rep. 1912-13.

† P. 75, Arch. Surv. Rep. 1912-1913.

என்றும் எழுதப்பட்டுள்ளது. இது மாயவரம் ஆக இருக்கலாம். மாயவரத்தை வடமொழியில் மயூரபுரி என்று கூறப்படுவது காண்க. இவ்வூரில் கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் பௌத்தவிகாரையும் பௌத்தர்களும் இருந்தனர் என்று அறிகிறோம்.

நாகைப்பட்டினம்: இது சோழநாட்டைச் சேர்ந்த துறைமுகப்பட்டினம். இது தொன்றுதொட்டு பௌத்தர்களின் புண்ணிய நகரமாக இருந்துவந்தது.

> "உற்றவர்க் குறுப்பறுத் தெரியின்க ணுய்த்தலை யன்ன
> தீமை செய்வோர்க்கு மொத்த மனத்ததாய்,
> நற்றவர்க் கிடமாகின்றது நாகையே'

என்று பௌத்தர்கள் இந் நகரைப் புகழ்ந்து கூறுவர்.

இங்கு அசோக சக்கரவர்த்தியார் கட்டிய **பதரதிட்ட விகாரை** யென்று ஒரு விகாரை இருந்தது. இந்த விகாரையில் கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆசாரிய தர்மபாலர் தங்கியிருந்து நெட்டிபகரணட்டகதா என்னும் உரை நூலைப் பாலிமொழியில் எழுதினார். நாகைப்பட்டினம் நாகநகரம் என்றும் கூறப்படுகிறது. இங்கிருந்த **நாகாநன விகாரை**யில் மகாகாசபதேரர் தங்கியிருந்தார்.

கி. பி. 720-ஆம் ஆண்டில், நரசிம்ம போத்தவர்மன் என்னும் பல்லவ மன்னன் காலத்தில், இந்தப் பட்டினத்தில் ஒரு பௌத்தக் கோயில் கட்டப்பட்டது. வர்த்தகத்தின்பொருட்டுச் சீன நாட்டிலிருந்து நாகைக்கு வரும் பௌத்தர்களுக்காகச் சீன அரசன் விருப்பப்படி அது கட்டப்பட்டது. பிற்காலத்தில் அக் கோயிலைச் 'சீனு கோயில்' என்று வழங்கியதாகத் தெரிகின்றது. வெனிஸ் தேசத்திலிருந்து சீனுவுக்கு யாத்திரை சென்ற மார்க்கோ-போலோ என்பவர் நாகைப்பட்டினத்தில் 'சீனு கோயில்' என்னும் பெயருள்ள ஒரு கோயில் இருந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

கி. பி. எட்டாம், அல்லது ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்த திருமங்கையாழ்வார் நாகைப்பட்டினத்துப்

பௌத்த விகாரையொன்றில், முழுதும் பொன்னால் அமைக்கப்பட்டிருந்த புத்த உருவச்சிலையைக் கவர்ந்து கொண்டுபோய், அப் பொன்னைக்கொண்டு திருவரங்கத் திருப்பதியில் திருமதில் எடுப்பித்தல் முதலான திருத் தொண்டுகளைச் செய்தார் என்பது குருபரம்பரப் பிரபாவம் முதலிய வைணவ நூல்களினால் தெரியவருகின்றது.

கி. பி. 985 முதல் 1014 வரையில் சோழ நாட்டை அரசாண்ட புகழ்பெற்ற இராச இராச சோழன் காலத்தில் நாகையில் 'ஸ்ரீ சைலேந்திர சூடாமணி விகாரை' என்னும் பௌத்தப்பள்ளி கட்டப்பட்டது. சுமாத்திரா தீவில் ஸ்ரீவிஜய என்னும் இராச்சியத்தையும், பர்மா தேசத்தில் கடாரம் என்னும் இராச்சியத்தையும் அரசாண்ட ஸ்ரீமாற விஜயோத்துங்க வர்மன் என்னும் அரசன் வேண்டுகோளின் படி, இந்த விகாரையை நாகைப்பட்டினத்தில் கட்டுவதற்கு இராச இராச சோழன் உத்தரவு கொடுத்தான். இந்த விகாரை ஸ்ரீமாற விஜயோத்துங்கனது தந்தையான சூடா மணிவர்மன் என்பவன் பெயரால் கட்டப்பட்டதாகலின், இதற்குச் 'சூடாமணி விகாரை' என்று பெயராயிற்று. இந்தச் சூடாமணி விகாரைக்கு ராஜ ராஜப் பெரும்பள்ளி என்றும் பெயர் உண்டு. கடாரத்தரசன் இவ்விடத்திலேயே கட்டிய மற்றொரு விகாரைக்கு ராஜேந்திர சோழப் பெரும் பள்ளி என்று பெயர். யானைமங்கலம் முதலான ஊர்களை இவ்விகாரைக்குப் பள்ளிச்சந்தமாக இராச இராசன் அளித்தான். ஆயினும், சாசனம் எழுதுவதற்கு முன்னமே அவன் இறந்துவிட, அவனுக்குப்பின் அரசாண்ட இரா சேந்திர சோழன், செப்புப் பட்டயத்தில் சாசனம் எழுதித் தந்தான். இவன் எழுதிக்கொடுத்த சாசனங்கள் லீடன் நகரத்துப் பொருட்காட்சிச்சாலையில் இப்போது இருக் கின்றன. இப்பொழுது இச் சாசனங்களுக்கு 'லீடன் சாசனம்' (Leiden Grant) என்று பெயர் வழங்கப்படு கின்றது. (Arch. Sur. of South India, Vol. IV, Epigraphica Indica, Vol. XXII.) என்னும் நூல்களில் இந்தச் சாசனங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

கி. பி. 14-ஆம் நூற்றாண்டில், இவ்வூரில் சீனர்கள் வியாபாரத்தின் பொருட்டு வந்திருந்தார்கள். இவ்வூர் புத்தப்பள்ளியில் சீனர்கள் ஒரு கல்வெட்டு எழுதிவைத்தார்கள். "14-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், எழுதப்பட்ட 'தாவோ-யி-சிலியோ' என்ற சீன நூல், சீன மொழியில் எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்று நாகப்பட்டினத்துப் பௌத்தப் பள்ளியில் இருந்ததாகக் கூறுகிறது," என்பர் திரு. S. K. கோவிந்தசாமி பிள்ளையவர்கள். (தென் இந்திய வணிகம், கரந்தைக் கட்டுரை.)

பர்மா தேசத்தில் ஹம்சவதி நாட்டை (Pegu)-பதினைந்தாம் நூற்றாண்டில் அரசாண்ட ராமாபதி ராஜன் என்பவன் அனுப்பிய பதினொரு பௌத்த பிக்ஷுக்களும், சித்திர தூதன் என்னும் தூதனும் இலங்கை சென்று தங்கள் வேலையை முடித்துக்கொண்டு மீண்டும் கப்பலேறிச் செல்லும் வழியில் கப்பல் புயலில் அகப்பட்டு உடைந்துபோக, நற்காலமாக உயிர் பிழைத்துக் கரையேறினார்கள் என்றும், நாகைப்பட்டினத்தை அடைந்து அங்கிருந்த 'பதரிகாராமம்' என்னும் பௌத்தப்பள்ளியில் தங்கியிருந்தார்கள் என்றும், அப்பள்ளிக்கருகில் சீன தேசத்து அரசனால் குகை வடிவமாகக் கட்டப்பட்டிருந்த பௌத்தப் பள்ளியில் புத்ததேவரை வணங்கினார்கள் என்றும் பர்மா தேசத்துக் கலியாணி நகரத்துக் கல்வெட்டுச் சாசனம் கூறுகிறது. இது நிகழ்ந்தது, கி. பி. 1477-ஆம் ஆண்டில்.

கி. பி. 1725-ஆம் ஆண்டில், 'சீனா கோயில்' என்னும் பெயருள்ள ஒரு கோயில் நாகைப்பட்டினத்தில் இருந்ததென்று வாலென்டின் (Valentyn) என்பவர் எழுதியிருக்கின்றார்.

நாகைப்பட்டினத்துக்கு வடக்கே, ஒன்று அல்லது இரண்டு கல்தொலைவில், 'புது வெளிக் கோபுரம்' என்றும், 'சீனா கோயில்' என்றும், 'கறுப்புக் கோயில்' என்றும், பெயருள்ள ஒரு கோபுரம் இருந்ததென்றும், இக்கோபுரம் நாகைப்பட்டினத்துக்கு வருகிற கப்பல்களுக்கு ஒரு அடையாளமாகக் கடலில் தோன்றியதென்றும், இந்தக்

கோபுரம் தாம் நேரில் 1849-ஆம் ஆண்டில் கண்டதென்றும் சர். வால்டர் எலியட் (Sir Walter Elliot) என்பவர் எழுதியிருக்கின்றார். (படம் 1 காண்க).

இந்தக் கோபுரம் இருந்த இடத்தில், ஏசுவின் சபைப் பாதிரிமார் இப்போது கட்டிடம் கட்டியிருக்கிறார்கள். 1867-இல் இந்தக் கோபுரத்தை இடித்துவிட்டுக் கட்டிடம் கட்டிக்கொள்ள அரசாங்க உத்தரவுபெற்று இதை இடித்துப் போட்டார்கள்.

இவ்விடத்தில் இருந்த மிகப்பழைய இலுப்பை மரம் ஒன்றை ஏசுவின் சபைப் பாதிரிமார் 1856-இல் வெட்டிய போது, அம்மரத்தின் அடியில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த ஐந்து சிறிய பௌத்த விக்கிரகங்களைக் கண்டெடுத்தனர். இவற்றில் நான்கு உலோகத்தினால் ஆனவை; ஒன்று பிங்கானால் செய்யப்பட்டது. இவற்றில் ஒன்று புத்தர் நின்றுகொண்டு உபதேசம் செய்வதுபோல் அமைக்கப்பட்டது. கவர்னராயிருந்த நேப்பியர் பிரபு (Lord Napier) நாகைக்குச் சென்றபோது, பாதிரிமார் இதை அவருக்குக் கொடுத்தார்கள். இந்த விக்கிரகத்தின் பீடத்தில், பதினொன்றும், அல்லது பன்னிரண்டாம் நூற்றாண்டில் வழங்கிய தமிழ் எழுத்தில், 'ஸ்வஸ்திஸ்ரீ ஆகம பண்டிதர் உய்யக்கொண்ட நாயகர்' என்று எழுதப்பட்டிருக்கின்றது. இன்னொரு விக்கிரகம் புத்தர் போதியின் கீழ் அமர்ந்து தியானத்தில் இருக்கும் பாவனையாக அமைந்துள்ளது. (படம் 2 காண்க). இன்னொன்று புத்தர் இரு கைகளையும் உயர்த்தி அபயம் அளிப்பதுபோல் அமைக்கப்பட்ட உருவம். இன்னொன்று சீன முறைப்படி செய்யப்பட்ட புத்தர் விக்கிரகம்.

நாகைப்பட்டினத்தில் இப்பொழுதும் 'புத்தன் கோட்டம்' என்னும் பெயருள்ள அக்கிரகாரம் இருக்கிறதென்றும், பண்டைக்காலத்தில் இந்த இடத்தில் பௌத்தக் கோயில் இருந்திருக்கவேண்டுமென்றும், பௌத்தக் கோயில் அழிந்த பிறகு அந்த இடத்தில் இந்த அக்கிர



நாகையிலிருந்த பௌத்தக் கோயிலின் கோபுரம்

(பக்கம் 50)



நாகையில் கண்டெடுக்கப்பட்ட புத்தர்

(பக்கம் 51)



காரம் ஏற்பட்டிருக்க வேண்டுமென்றும் கூறுவர் டாக்டர் S. கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள்.

நாகைப்பட்டினத்திலிருந்து கண்டெடுக்கப்பட்ட வேறு பௌத்த உருவச் சிலைகள் சென்னைப் பொருட்காட்சி சாலையில் உள்ளன.

வெள்ளனூர் : இவ்வூர் புதுக்கோட்டையில் உள்ளது. இவ்வூர் கச்சேரியின் தென்புறத்தில் புத்தர் உருவச்சிலையொன்று இருக்கிறது.

செட்டிபட்டி : புதுக்கோட்டை குளத்தூர் தாலூகாவில் உள்ள இவ்வூரில், 3′ 9″ உயரம் உள்ள புத்தர் உருவச் சிலை ஒன்று இருக்கிறது.

ஆலங்குடிபட்டி : இதுவும் ஷை தாலூகாவில் உள்ள ஊர். இங்கும் 3′ 6″ உயரம் உள்ள புத்தர் உருவச்சிலை இருக்கிறது.

இனி, தொண்டை நாட்டில் சிறப்புற்றிருந்த பௌத்த ஊர்களைப்பற்றி ஆராய்வோம்.

காஞ்சீபுரம் : இந்த ஊர் தொன்றுதொட்டு சைவ, வைணவ, ஜைன, பௌத்த மதத்தவர்களுக்கு நிலைக்களமாக இருந்துவந்தது. பௌத்தர்கள் பண்டைக்காலத்தில் இங்கு அதிகமாக இருந்தனர். இந்த ஊரில், கி. மு. மூன்றும் நூற்றாண்டில் அரசாண்ட அசோக சக்கரவர்த்தியினால் கட்டப்பட்ட ஒரு பௌத்த தூபி இருந்ததாக கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இந்த நகரத்திற்கு வந்த யுவாங் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் எழுதியிருக்கின்றார். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் சோழநாட்டை அரசாண்ட கிள்ளிவளவன் என்னும் சோழன் தம்பி இளங்கிள்ளி என்பவன் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்கொண்டு தொண்டைநாட்டை அரசாண்ட காலத்தில், ‘பைம்பூம் போதிப் பகவற்கு’ ஒரு சேதியம் அமைத்தான் என்று மணிமேகலையினால் அறிகின்றோம். இளங்கிள்ளி அரசாண்ட கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலே, காஞ்சிபுரத்துக்குத்

தென்மேற்குத் திசையில், ‘ தருமத வனம் ’ என்னும் ஒரு பூந்தோட்டம் இருந்ததென்றும், அதில் இளங்கிள்ளி ஒரு புத்த பீடிகையை அமைத்து விழாவும் சிறப்பும் செய்தா னென்றும் மணிமேகலையினால் அறிகின்றோம்.

காவிரிப்பூம் பட்டினத்தில் பௌத்தப் பள்ளியின் தலைவராக இருந்த அறவண அடிகள் பிற்காலத்தில் காஞ்சி புரத்தில் வந்து தங்கிப் பௌத்த மதத்தைப் போதித்து வந்தார் என்பதும் மணிமேகலையினால் பெறப்படுகின்றது. இன்றைக்கும், காஞ்சீபுரத்தில் அறப்பணஞ்சேரி என்னும் ஒரு தெரு உண்டென்றும், அது ‘ அறவணஞ்சேரி ’ என்பதன் மரூஉவென்றும், அறவண அடிகள் தங்கியிருந்த தெரு (சேரி = தெரு) ஆதலின், அத்தெரு இப்பெயர் வாய்ந்ததென்றும் கூறுவர் வித்துவான் ராவ்பகதூர் மு. இராகவ அய்யங்கார் அவர்கள். அன்றியும், ‘புத்தேரித் தெரு’ என்னும் பெயருடன் ஒரு தெரு காஞ்சீபுரத்தில் இருக்கின்றதென்றும், அது ‘ புத்தர் தெரு ’ என்பதன் மரூஉவென்றும் ஷை அய்யங்கார் அவர்களே கூறுவர். மாதவி மகள் மணிமேகலை பௌத்த தருமங்கேட்டுத் துறவு பூண்டபின், காஞ்சீபுரத்திலே கடைநாள் வரையில் இருந்த தாக மணிமேகலை கூறுகின்றது.

கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்த புத்தகோஷ ஆசாரியர், பிடகநூல்களுக்கு உரைகளை எழுதியவர். இவர், தமது நண்பர்களான சுமதி, ஜோதிபாலர் என்னும் பௌத்த பிக்ஷுக்களுடன் காஞ்சீபுரத்தில் வசித் திருந்ததாகவும், அவர்கள் வேண்டுகோளின்படி, இலங்கைக் குச் சென்றதாகவும் தமது மனோரதபூரணீ என்னும் உரை யில் குறிப்பிடுகிறார். புத்தகோஷர் காஞ்சியில் இருந்த போது அவருக்கு **அண்டாத்தகதா** என்னும் நூல் கிடைத்த தாகவும், அந்நூல், தாம் திரிபிடகங்களுக்கு உரை எழுது வதற்குத் துணையாக இருந்தது என்றும் சாமந்தபாசாதிகா என்னும் உரையில் இவர் கூறுகிறார்.

நளாந்தா பல்கலைக் கழகத்தின் தலைமைப் பேராசிரிய ராக இருந்த ஆசாரிய தர்மபாலரும், அபிதம்மாத்த சங்

கிரகம் முதலிய நூல்களை இயற்றிய அநுருத்தரும் காஞ்சியில் பிறந்தவர்கள். அநுருத்தர் காஞ்சியில் இருந்த மூலசோம விகாரையில் இருந்தவர்.

கி. பி. 640-இல் காஞ்சீபுரத்திற்கு வந்த யுவாங் சுவாங் என்னும் சீன யாத்திரிகர், காஞ்சீபுரத்தில் நூறு பௌத்தப்பள்ளிகளும் ஆயிரம் பிக்ஷுக்களும் இருந்ததாகக் கூறுகிறார். ஆசாரிய திக்நாகர் என்பவர், காஞ்சிக்கு அருகில் சிம்மவக்த்ரம் என்னும் இடத்தில் பிறந்தவர் என்று இந்த யாத்திரிகர் கூறுகிறார். இவர் கூறுகிற சிம்மவக்த்ரம் என்னும் ஊர், காஞ்சிக்கு அருகில் உள்ள சீயமங்கலமாக இருக்கவேண்டும்.

யுவாங் சுவாங் காஞ்சிக்கு வந்த சற்றேறக்குறைய அதேகாலத்தில் காஞ்சீபுரத்தை அரசாண்ட மகேந்திர விக்கிரமன் என்னும் பல்லவ அரசன் (அப்பர் சுவாமிகள் காலத்தவன்), தான் எழுதிய மத்தவிலாசப் பிரகசனம் என்னும் நூலில், காஞ்சியில் பல பௌத்த விகாரைகள் இருந்தன என்றும் அவ்விகாரைகளுக்கெல்லாம் தலைமையாக இருந்த பெரிய விகாரைக்கு இராஜ விகாரை என்று பெயர் இருந்ததென்றும் கூறுகிறார்.

காஞ்சீபுரத்தைத் தலைநகராகக்கொண்டு அரசாண்ட பல்லவ அரசர்களுள் புத்தவர்மன் என்பவன் பௌத்த மதத்தைச் சேர்ந்தவன் என்று கூறப்படுகின்றான். இவன் பௌத்தர்களுக்காகப் பௌத்தப்பள்ளிகளைக் கட்டி அவர்களை ஆதரித்திருக்கக்கூடும். கி. பி. எட்டாம் நூற்றாண்டில், ஹிமசீதளன் என்னும் அரசன் பௌத்தர்களை ஆதரித்தான் என்றும், அகளங்கர் என்னும் ஜைனர் காஞ்சீபுரத்தில் இவ்வரசன் முன்னிலையில் பௌத்தர்களுடன் சமயவாதம் செய்து வென்று, இவ்வரசனை ஜைன மதத்தில் சேர்த்ததோடு, தோல்வியுற்ற பௌத்தர்களை இலங்கைக்கு அனுப்பிவிட்டார் என்றும் தெரிகின்றது.

"இன்னும் காஞ்சீரபுத்தில் கச்சீஸ்வரர் கோயில் என்று வழங்கும் ஆலயம் பூர்வத்தில் புத்தர் கோயிலெனத்

தெரிகிறது. இக்கோயிலின் முன் கோபுரத்தின் அஸ்தி வாரக் கல் கட்டிடத்தில் சில புத்த விக்கிரகங்கள் இப்போதும் இருக்கின்றன. இன்னும் சில, முன்பு இருந்த உருவம் தெரியாமலிருக்குமாறு அழிக்கப்பட்டிருக்கின்றன. ஷை கோவில் உள் மண்டபத்திலும் சில கல்தூண்களில் புத்தவிக்கிரகங்கள் இப்போது மிருக்கின்றன. இது புத்தர் கோவில் என்பதற்கு மற்றோர் ஆதாரமிருக்கிறது. அதாவது: இக்கோவில் மேல்புறம் வீதிக் கடைசியிலிருந்து வரும் ஏரிக்கு 'புத்தேரி' என்றும், வீதிக்கு 'புத்தேரித்தெரு' என்றும் பெயர்கள் ஏற்பட்டு இப்போதும் வழங்கிவருகின்றன."*

கச்சீஸ்வரர் கோயிலுக்கு நான் சென்று பார்த்த போது, தூண்களில் மட்டும் புத்தர் உருவங்களைக் கண்டேன். கோபுர அஸ்திவாரத்தில் இருந்த புத்த விக்கிரகங்கள் காணப்படவில்லை. புத்தேரித்தெரு என்று இப்போது வழங்கப்படுகிற தெரு முற்காலத்தில் புத்தர் தெரு என்று வழங்கப்பட்டு அவ்வாறே விக்கிரயபத்திரங்களிலும் எழுதப்பட்டு வந்தன. புத்தேரித் தெருவின் மேற்குக் கோடியில் உள்ள கயிலாசநாதர் கோயில் என்னும் இராஜசிம்மேச்சரம் ஆதியில் புத்தர் கோயிலாக இருக்கவேண்டும் என்பதற்கு அக் கோயிலின் புராண ஆதாரங்களால் யூகிக்கப்படுகிறது.

காஞ்சி ஏகாம்பரேஸ்வரர் கோவில் வெளிமதில் சுவற்றில் ஐந்து புத்த விக்கிரகங்கள் பலகைச் சிற்பமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த மதிற்சுவர் விஜய நகர அரசனை கிருஷ்ணதேவராயரால் 1509-இல் கட்டப்பட்டது. பழைய புத்தர் கோயில்களை இடித்து அக்கற்களைக்கொண்டு இந்த மதிற்சுவர் கட்டியிருக்கவேண்டும், அதனால்தான் இப்புத்த விக்கிரகங்கள் இச் சுவற்றில் காணப்படுகின்றன.

---

* பக்கம் 126, திருக்குறள் ஆராய்ச்சியும், ஜைனசமய சித்தாந்தமும். தி. அ. அனந்தநாத நயினர் எழுதியது. 1932.

காஞ்சீபுரத்தில், கச்சிக்கு நாயகர் கோயில் என்னும் புத்தர் கோயில் இருந்தது. அதற்கு மானியமாக செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள நாவலூர் கிராமம் விடப்பட்டிருந்தது.* இந்தக் கோயில் இப்போது காணப்படவில்லை. காஞ்சி, கருக்கினில் அமர்ந்தாள் கோயில் என்னும் கோயிலில் இரண்டு புத்தச்சிலைகள் உள்ளன; அவை, முன்பு காஞ்சி மேட்டுத்தெருவில் இருந்தனவாம். காமாட்சியம்மன் கோயில் ஆதியில் பௌத்தரின் தாராதேவி ஆலயம். இவ்வாலயத்தில் பல புத்தவிக்கிரகங்கள் இருந்தன. அவைகளில், 6 அடி உயரம் உள்ள நின்றவண்ணமாக அமைக்கப்பட்ட "சாஸ்தா" (இது புத்தர் உருவம்) என்னும் உருவம் இப்போது சென்னைப் பொருட்காட்சி சாலையில் இருக்கிறது. இக் கோயிலில் இருந்த வேறு புத்தவிக்கிரகங்கள் (கருங்கல் சிலைகள்) சில ஆண்டுகளுக்குமுன் நன்னிலையில் இருந்ததைக் கண்டேன். ஆனால் அவை பிறகு துண்டுதுண்டாக உடைக்கப்பட்டுக் கிடந்ததைக் கண்டேன். காமாட்சியம்மன் கோயிலுக்கு அருகில் உள்ள ஒரு தோட்டத்தில் புத்தவிக்கிரகம் ஒன்று இப்போதும் நன்னிலையில் இருக்கிறது. இத்தோட்டத்தில் உள்ள மண்டபத்தைக் கட்டிய போது, அதன் அடியில் சில புத்த விக்கிரகங்களைப் புதைத்து இருக்கிறார்களாம்.

கி. பி. 14-ஆம் நூற்றாண்டில் இருந்த ஜாவா தேசத்துக் கவிவாணர் ஒருவர், காஞ்சிபுரத்தில் 14 பௌத்தப் பள்ளிகள் இருந்தன என்று கூறியுள்ளார். அந்நூற்றாண்டில், காஞ்சியில், பௌத்தமதத்தையும் வைணவ மதத்தையும் பிரித்தறிய முடியாதபடி இரண்டறக் கலந்திருந்தன என்று தெரிகிறது.†

அறவண அடிகள், மணிமேகலை, ஆசாரிய புத்த கோஷர், சுமதி, ஜோதிபாலர், திங்நாக ஆசாரியர், போதி தரும ஆசாரியர், ஆசாரிய தருமபாலர், ஆநந்ததேரர், அநு

* S. I. Epi Rep. 1934-35. P. 76.

† P. 26. Chengleput Dt. Manual. 1879.

ருத்தர், புத்தாதித்யர் முதலிய பேர்பெற்ற தேரர்கள் இவ்வூரில் வசித்தவர்கள். இவர்கள் அன்றியும்,

காஞ்சிபுரத்தில், கி. பி. 9-முதல் 11-ஆவது நூற்றாண்டு வரையில் இருந்த சில பௌத்தப் பெரியார்களின் பெயர்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இப்பெயர்கள், பாடலிபுரத்தில் உள்ள பொருட்காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ள பௌத்த உருவங்களின் பீடத்தில் நாகரி எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இந்தப் பௌத்த விக்கிரகங்கள், கயா ஜில்லாவில் உள்ள குர்கிஹார் என்னும் இடத்தில் இருந்து கிடைத்தன. குர்கிஹார், பண்டைக் காலத்தில் குக்குட பாதகிரி என்னும் பௌத்த இடமாக இருந்தது. இங்கிருந்து கிடைத்த, உலோகங்களால் செய்யப்பட்ட பௌத்த உருவங்களில் 17-உருவங்கள் காஞ்சீபுரத்திலிருந்த பௌத்தப் பெரியவர்களால் அளிக்கப்பட்டவை.* அவர்கள் பெயர் வருமாறு: அம்ருதவர்மன், புத்தவர்மன், தர்மவர்மன், தூதசிம்மன், பிரபாகரசிம்மன், மஞ்சுஸ்ரீ, வீரியவர்மன், புத்தவர்மன், (இவர் காஞ்சியில் இருந்த கந்தகுடியில் இருந்தவர். புத்தர் கோயிலுக்குக் கந்தகுடி என்பது பெயர்). புத்தஞானர், சுகசுகர், விரோசன சிம்ம ஸ்தவிரர் (இவர் காஞ்சிக்கு அருகில் உள்ள நரசிம்ம சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரில் பிராமண குடும்பத்தில் பிறந்து, வேத வேதாங்கங்களைக் கற்றுணர்ந்து, பின்னர் பிரஞ்ஞசிம்மர் என்னும் பௌத்த குருவின் சீடராகி விரோசன சிம்ம ஸ்தவிரர் என்னும் துறவுப்பெயர் கொண்டவர்.) ரகுலவர்மர், சந்திரவர்மர், நாகேந்திரவர்மர், வீரவர்மர், அவலோகித சிம்மர் (இவர் கேரள தேசத்திலிருந்து வந்து காஞ்சியில் தங்கியவர்.) இவர்கள் எல்லோரும் பௌத்த பிக்ஷுக்கள் என்று தெரிகிறது. இவர்களில் வர்மர் என்னும் பெயரையுடையவர்கள் பல்லவ அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்க

* Ninety Three Inscriptions on the Kurkihar Bronzes, Patna Museum. by A. Banerji Sastri. The Journal of the Bihar and Orissa Research Society Vol. XXVI. (1940.)

ளாக இருக்கக்கூடும். இவர்கள் கி. பி. 9-முதல் 11-ஆம் நூற்றுண்டுக்கு இடைப்பட்ட காலத்தில் இருந்தவர் ஆவர்.

திருப்பாதிரிப்புலியூர்: இப்பொழுது கூடலூருக்கு அருகில் உள்ள திருப்பாதிரிப்புலியூரில் பண்டைக்காலத்தில் பௌத்தர் இருந்தனரென்றும், அங்குப் பௌத்தப் பல்கலைக்கழகம் ஒன்றிருந்ததென்றும் கூறுவர். ஆயினும், அவற்றைப்பற்றிய வரலாறுகள் ஒன்றும் தெரியவில்லை.

சங்கமங்கை: இதுவும் தொண்டை நாட்டிலிருந்ததாகத் தெரிகின்றது. பௌத்தராயிருந்து, பின்னர்க் காஞ்சீபுரஞ் சென்று பௌத்த தருமத்தை நன்கு கற்று, பின்னர்ச் சைவசமயத்தைச் சேர்ந்த சாக்கிய நாயனர் இவ்வூரில் பிறந்தவர். இந்த ஊரின் பெயரே, இது பௌத்தரது ஊர் என்பதைத் தெரிவிக்கும். சங்கம் என்பது, புத்த, தர்ம, சங்கம் என்னும் மும்மணிகளில் ஒன்று. அதாவது, பௌத்த பிக்ஷுக்களுக்குச் சங்கம் என்பது பெயர். எனவே, சங்கமங்கை என்கிற பெயர் பௌத்தச் சார்பானதென்பதைத் தெரிவிக்கின்றது.

ஆவூர்: வட ஆர்க்காடு ஜில்லா திருவண்ணுமலை தாலூகாவில் உள்ளது இவ்வூர். இவ்வூரில் இடிந்துபோன சிவன்கோயில் சாசனம், கோப்பெருஞ்சிங்கதேவர் II உடைய 30-ஆவது ஆண்டில் எழுதப்பட்டது. இச்சாசனத்தில், இவ்வூர் "பெண்ணை வடகரை சேதிமண்டலத்து ஆவூர்" என்றும், இக்கோயில் திருவகத்தீஸ்வரம் உடைய நாயனர் என்றும் கூறப்படுகிறது. இச்சாசனத்தில் ஸ்ரீமற்சேன மஹாபோதி என்னும் பெயரும், "சா(க்)கியர்" என்னும் பெயரும் காணப்படுகின்றன. ஆகவே இவ்வூரில் கி. பி. 1272-இல் பௌத்த வணிகர் இருந்த செய்தி அறியப்படுகிறது. திரு. அகத்தீஸ்வரம் உடைய நாயனர் என்பது அகத்தி அல்லது அகஸ்தி என்னும் பௌத்த முனிவரைக் குறிக்கிறது போலும்.*

* S. I. I. Vol. XII, Page 148.

கூவம்: செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ளது. இவ்வூருக்குத் திருவிற்கோலம் என்றும் பெயர் உண்டு. இவ்வூரில் பண்டைக்காலத்தில் பௌத்தர்கள் இருந்தார்கள். இவ்வூரில் இருந்த பெரிய புத்தச்சிலை, இப்போது சென்னைப் பொருட்காட்சிசாலையில் கொண்டு வந்து வைக்கப்பட்டிருக்கிறது.

ஞாயர்: செங்கற்பட்டு ஜில்லா புழற்கோட்டத்து ஞாயர் நாட்டு ஞாயர் என்று சாசனங்களில் இவ்வூர் கூறப்படும். இவ்வூரில் புத்தேரில் உடையார் கோயில் என்னும் பௌத்தக் கோயில் ஒன்று இருந்தது.

நாவலூர்: செங்கல்பட்டு ஜில்லா, பொன்னேரி தாலூகாவில் உள்ள ஊர். பௌத்த காஞ்சியில் (காஞ்சீபுரத்தில்) இருந்த கச்சிக்கு நாயகர் கோயில் என்னும் புத்த கோயிலின் பள்ளிச்சந்தம் (மானியம்) ஆக இருந்தது இவ்வூர் என்று இங்குள்ள ஒரு சாசனம் கூறுகிறது. இச்சாசனத்தின் பின்புறத்தில் தர்ம சக்கரம் (பௌத்த சின்னம்) பொறிக்கப்பட்டுள்ளது.*

திருச்சோபுரம்: தென் ஆர்க்காடு ஜில்லா, கூடலூர் தாலூகாவில் உள்ள இவ்வூர் மங்களபுரீசுவரர் கோயில் முன்மண்டபத்து மேல்தளத்தில் உள்ள ஒரு கல் சாசனம் சிதையுண்டிருக்கிறது. இச்சாசனத்தில், சாரிபுத்திர பண்டிதர் என்பவர் தானம் செய்த செய்தி கூறப்படுகிறதோடு **சங்கத்தார்** குறிப்பிடப்படுகின்றனர். சங்கம் பௌத்த பிக்குச் சங்கத்தைக் குறிக்கிறது. சாரிபுத்திர பண்டிதர் என்னும் பெயர் பௌத்தப் பெயர் ஆகும். ஆனால், இந்தச் சாரிபுத்திரரும், திருஞானசம்பந்தருடன் வாதம் செய்த சாரிபுத்தர் என்பவரும் வெவ்வேறு ஆட்கள். இந்தச் சாசனம், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் I காலத்தில் கி. பி. 1264-65-இல் எழுதப்பட்டது.†

பல்லாவரம்: பல்லவபுரம் என்பதன் திரிபு இப்பெயர். காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்கே 3 மைலுக்

* S. I. Ep. Rep. 1934-35. Page 76. 13 of 1934-35.
† 113 of 1914. Ep. Rep. 1904. p. 44.

கப்பால் இருக்கிறது. இவ்வூரில், காஞ்சீபுரத்தை அரசாண்ட பல்லவ அரச குடும்பத்தார் வாழ்ந்திருந்தார்கள். ஆகையால், இவ்வூர் இப்பெயர் பெற்றது. இப்போது இது சிறு கிராமமாக இருக்கிறது. பல்லவர் காலத்தில், இவ்வூர் சிறப்புற்றிருக்கவேண்டும். இவ்வூரில், முதலாவது மகேந்திரவர்மன் கற்பாறையைக் குடைந்து அமைத்த குகைக்கோயில் ஒன்று இருக்கிறது. 15-7-46-இல், இவ்வூருக்குச் சென்றிருந்தபோது இவ்வூருக்கு அண்மையில் உள்ள கணிகிலுப்பை என்னும் ஊரில் புத்தர் உருவச்சிலையொன்றை ஏரிக்கரையில் கண்டேன். இவ்வுருவம், ஏரிக்கரைக்குக் கொண்டுவரப்படுவதற்கு முன்பு, அவ்வூர் விநாயகர் கோயிலுக்குப் பக்கத்தில் இருந்தது. விநாயகர் கோயிலுக்குப் பக்கத்தில், இந்தப் புத்தர் உருவம் இருந்த கருங்கல் பீடம் அழியாமல் இருக்கிறது. அவ்வூர்த் தெருவின் எதிர்கோடியில் பௌத்தர்களுடைய தர்மச்சக்கரம் பொறிக்கப்பட்ட கருங்கல் நாட்டப்பட்டிருக்கிறது. புத்தர் கோயிலை இடித்து அந்த இடத்தில் விநாயகர் ஆலயம் கட்டியிருக்கிறார்கள். பிறகு, புத்த விக்கிரகத்தை ஏரிக்கரையில் கொண்டுபோய் போட்டுவிட்டார்கள். பண்டைக்காலத்தில் புத்தர் கோயிலாக இருந்தவை, பிற்காலத்தில் விநாயகர் கோயிலாக மாற்றப்பட்டன என்பதற்கு இதுவும் ஒருசான்று. பல்லவ அரசகுடும்பம் இருந்த இவ்வூரில் புத்தர் ஆலயம் இருந்தது வியப்பல்ல. ஏனென்றால், பல்லவ குடும்பத்தில் ஒரு பிரிவினர் பௌத்தர்களாக இருந்தனர். புத்தவர்மன் என்னும் பெயரைச் சூடிய பல்லவ அரசர்கள் சாசனங்களில் குறிக்கப்பட்டுள்ளனர். இங்குள்ள புத்த விக்கிரகமும், தர்மச் சக்கரக் கல்லும் இவ்வூரில் புத்தர்கோயில் இருந்ததை வலியுறுத்துகின்றன.

மாங்காடு: செங்கல்பட்டு ஜில்லா, சைதாப்பேட்டை தாலூகா பூந்தமல்லிக்கு அருகில் இருக்கிறது இக்கிராமம். இவ்வூர் வெள்ளீசுவரர் ஆலயத்தில் உள்ள கல்வெட்டுச் சாசனம் ஒன்று, திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை

கொண்டான் சுந்தரபாண்டியதேவர் I (1251-64) காலத்தில், அவரது 5-ஆவது ஆண்டில் எழுதப்பட்டது. இதில், இங்கிருந்த பள்ளிக்கு (புத்தர் கோயில்) மாங்காடு கிராமம், பள்ளிச்சந்தமாகக் கொடுக்கப்பட்டதென்று எழுதப்பட்டுள்ளது.*

இவ்வூரில் மூன்று மகாயான பௌத்த தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஒன்று தலையுடைந்து கிடக்கிறது. அன்றியும், மாங்காட்டுக்கு அருகில் உள்ள பட்டு என்னும் கிராமத்தில், ஒரு விநாயகர் கோயிலுக்குப் பக்கத்தில், புத்தர் உருவச்சிலையொன்று இருக்கிறது. இதற்கு அருகில் தர்மராஜா கோயிலும் இருக்கிறது. இங்கு ஆதியில், புத்தர்கோயில் இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில், புத்தர்கோயிலை அழித்து விநாயகர் கோயிலையும், தர்மராஜர் கோயிலையும் கட்டியிருக்க வேண்டும். புத்தர்கோயிலை, விநாயகர் கோயிலாகவும், தர்மராஜர் கோயிலாகவும் அமைப்பது பிற்காலத்து வழக்கம்.

இரண்டாங்காடு: செங்கல்பட்டு ஜில்லா ஸ்ரீபெரும்பூதூர் தாலூகா குன்றத்தூருக்கு அருகில் உள்ளது இரண்டாங்காடு. இங்கு, புத்தர் உருவச்சிலையொன்று இருக்கிறது.

இனி, பாண்டிநாட்டில் பௌத்தர் இருந்த ஊர்களைப் பற்றி ஆராய்வோம்.

மதுரை: இந்த நகரத்தில் பௌத்தப் பள்ளிகள் இருந்தனவென்பதை மதுரைக் காஞ்சி என்னும் நூலினால் அறிகிறோம்.

> ' திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
> யோம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
> தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
> தாமு மவரு மோராங்கு விளங்கக்

* 783. 358 of 1908. Top. List Vol. I.

காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் கையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்குங் கடவுட் பள்ளியும்'

இதன் உரை : 'திண்ணிய ஒளியினையுடைய பேரணி கலங்களையுடையவராய் விருப்பம் அழகு பெற்ற பெரிய இளமையினையுடைய பெண்டிர், தாம் முயங்குதலைச் செய்து கூடிப் பாதுகாக்குங் கணவரையுங் கூட்டிக் கொண்டு, தாது சேர்ந்த செவ்வித் தாமரைப் பூவைப் பிடித்தாற்போல ஒள்ளிய சிறு பிள்ளைகளையும் எடுத்துக் கொண்டு, தாமும் கணவரும் பிள்ளைகளும் சேரச் சீலத் தாலே விளங்கும்படியாகப் பூசைக்கு வேண்டும் பூவினை யுடையராய்த் தூபங்களையுடையராய் வணங்கினராய் மிகுத் துத் துதித்துப் பாதுகாத்தலை நடத்தும் பௌத்த பள்ளியும்.' இவ்வுரை நச்சினார்க்கினியர் எழுதியது ஆகும்.

அசோக சக்கரவர்த்தி, மதுரைக்குக் கீழ்த்திசையில் கட்டிய ஒரு பௌத்த விகாரை இடிந்து பழுதுபட்ட நிலையில் இருந்ததென்றும், அதற்குச் சற்றுச் சேய்மையில் மகேந்திரர் கட்டிய பௌத்தப் பள்ளியொன்றும் அழிந்து போகும் நிலையில் இருந்ததென்றும் கி. பி. ஏழாம் நூற்றாண் டின் முற்பகுதியில் தமிழ் நாட்டில் பிரயாணம் செய்த யுவாங்-சுவாங் என்னும் சீனர் எழுதியிருக்கின்றார். மதுரையில், கி. பி. இரண்டாம் நூற்றாண்டில், 'சிந்தா தேவி' என்னும் அம்மன் கோயில் ஒன்று இருந்ததாக மணிமேகலையினால் தெரியவருகின்றது. இந்தக் கோயிலைப் பௌத்தர்களின் தாராதேவி கோயில் என்று ஆராய்ச்சி யாளரிற் சிலர் கருதுகின்றார்கள்.

அரிட்டாபட்டி : மதுரை ஜில்லாவில் இப்போது குக்கிராமமாயுள்ள ஒரு ஊர். கி. மு. மூன்றாம் நூற்றாண் டில் இலங்கையை அரசாண்ட தேவனாம்பிரிய திஸ்ஸன் என்னும் அரசனுடைய அம்மானாகிய அரிட்டர் என்னும் பௌத்த பிக்ஷு, மகேந்திரருடன் சேர்ந்து பாண்டி நாட்டில் பௌத்த மதத்தைப் பரவச்செய்தாரென்றும், அந்த அரிட்டர் என்பவர் இந்த ஊருக்கு அருகில் உள்ள

மலைக்குகையில் வாழ்ந்து வந்தார் என்றும், ஆகவே இவ் வூருக்கு அவர் பெயர் வழங்கலாயிற்று என்றும் ஆராய்ச்சி வல்ல அறிஞர் கருதுகின்றனர். இந்த அரிட்டாபட்டிக் கருகில் உள்ள பௌத்தக் குகைகளில் அசோக மன்னர் காலத்தில் வழங்கிய பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட் டுள்ளன. இது பண்டைக்காலத்தில் பௌத்தக் கிராமமா யிருந்து, பிற்காலத்தில் அழிந்து இப்போது குக்கிராம மாக இருக்கின்றது.

போதிகை: பொதிகை மலையும் பௌத்தர்களின் புண்ணிய மலைகளில் ஒன்றாகப் பிற்காலத்தில் கருதப்பட்டு வந்தது. அந்த மலையில் அவலோகிதீஸ்வரர் என்னும் போதிசத்வர் வீற்றிருக்கிறார் என்பதும், அவரிடம் அகத் தியர் தமிழ் கற்றார் என்பதும் பௌத்தர்களின் கொள்கை. இந்த மலையை அடுத்து 'மலைய நாடு' என்னும் பெய ருடைய நாடு இருந்தது. அந்நாட்டில் தந்திரயான பௌத்த மதத்தவராகிய வச்சிரபோதி (கி. பி. 661—730) என்பவர் பிறந்தார். சீன தேசத்திலும், ஜப்பான் தேசத்திலும் சென் பௌத்த (Zen Buddhism) மதத்தைப் பரப்பியவர் இவரே.

தஞ்சை: பாண்டிநாட்டில் இருந்த தஞ்சாவூர். இந்த வூரில் வாணன் என்னும் சிற்றரசன் ஒருவன்மீது இயற்றப் பட்ட தஞ்சைவாணன் கோவை என்னும் ஒரு நூல் தமிழில் உண்டு. பாலி மொழியில் பதினொன்கு நூல்களை இயற்றிய பேர்பெற்ற பௌத்த பிக்ஷுவாகிய ஆசாரிய தர்மபாலர் இந்த ஊரில் பிறந்தார். இந்த ஊரிலும் பௌத்தர்கள் இருந்ததாகத் தெரிகின்றது.

திருமாலிருஞ்சோலை: 'அழகர்மலை' என்று வேறு பெயருள்ள இந்த இடம் இப்போது வைணவத் திருப்பதி களில் ஒன்று. இங்குள்ள மலைக்குகைகளில் பிராமி எழுத் துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இங்கு உள்ள பெரி யாழ்வார் நந்தவனத்துக்கு எதிரில் உள்ள குளம் ஆராமத் துக் குளம் என்று பெயர் வழங்கப்படுகிறது ஆராமம்

என்பது சங்காராமம். அதாவது பௌத்த பிக்ஷுக்கள் வசிக்கும் இடம். அன்றியும், இக்கோயிலின் பழைய ஸ்தல விருக்ஷம் போதி (அரச) மரம் என்று கூறப்படுகிறது. இக்குறிப்புகள் யாவும், இது பண்டைக்காலத்தில் பௌத்தக் கோயிலாக இருந்ததென்பதைக் காட்டுகின்றன.

தென்கரை: திருச்செந்தூர் தாலூகாவில் உள்ள ஊர். இங்கு புத்தர் உருவச்சிலை யொன்று இருக்கிறது.*

ஆசாரிய தம்மபாலர், வச்சிரபோதி, தம்மகீர்த்தி முதலிய பௌத்தப் பெரியார்கள் பாண்டிதேசத்தில் இருந்தவர் ஆவர். பாண்டியதேசம், பாலி மொழியில் தம்பராட்டா (தாம்பிரபரணி தேசம்) என்று கூறப்படுகிறது. பாண்டியநாட்டில், பாண்டவ மலைகளும் அவற்றில் பிராமி எழுத்துக்களும் அதிகமாகக் காணப்படுகின்றன. ஜைன மதத்திற்கு முன்பு, பௌத்த மதம் பாண்டிநாட்டில் சிறப்புற்றிருந்தது என்பதற்குப் போதிய ஆதாரங்கள் உள.

இனி, சேரநாட்டில் இருந்த பௌத்த ஊர்களை ஆராய்வோம்.

வஞ்சிமாநகர்: இப்போது மலையாள தேசமாக மாறிவிட்ட கேரள தேசம் பண்டைக்காலத்தில் தமிழ் நாடாக இருந்தது. அப்போது அதற்குச் சேரநாடு என்று பெயர். அதன் தலைநகராக இருந்தது வஞ்சிமாநகர். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த சிலப்பதிகாரக் கதைத்தலைவனாகிய கோவலன் என்பவனுடைய மூதாதை, கோவலன் என்னும் பெயருள்ளவன், இந்த நகரத்தில் சிறந்ததோர் புத்தசேதியம் கட்டினான் என்று மணிமேகலையினால் தெரிகின்றது. சிலப்பதிகாரத் தலைவனாகிய கோவலனது ஒன்பது தலைமுறைக்கு முற்பட்ட பாட்டனான இந்தக் கோவலன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு உற்ற நண்பன் என்பதும், பாதபங்கய மலையி

* P. I. M. A. R. 1916-17.

விருந்து வந்த ஒரு பௌத்த பிக்ஷுவின் உபதேசங்களைக் கேட்டு இவன் துறவு பூண்டு சேதியம் அமைத்ததோடு, தன் பொருள் முழுதும் தானம் செய்தான் என்பதும் தெரிகின்றன. இவன் கி. மு. முதல் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவனாகலின், இந்தச் சேதியம் கட்டப்பட்டதும் அக்காலமாகும். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில், இந்தச் சேதியமும் இன்னும் பல பௌத்தப் பள்ளிகளும் இருந்ததாகவும், கோவலன் தந்தை மாசாத்துவான் என்பவனும், மணிமேகலையும், அறவண அடிகள் என்னும் பிக்ஷுவும் இந்த நகரத்திற் சென்று இங்கிருந்த பௌத்த விகாரைகளைத் தொழுதனரென்பதாகவும் மணிமேகலை கூறுகின்றது.

பாண்டவமலைகளும் கழுகுமலைகளும்: தமிழ்நாட்டில் இருந்த பௌத்த திருப்பதிகள் சிலவற்றை மேலே கூறினோம். பண்டைக்காலத்திலே, தமிழ்நாடு முழுவதும் பௌத்த, ஜைன சமயங்கள் பரவியிருந்தன என்பதைச் சாசனங்களும் நூல்களும் சான்று பகர்கின்றன. கி. பி. 7-ஆம் நூற்றாண்டிலே, சைவசமயம் குன்றி, பௌத்த மதமும், சமண சமயமும் பரவியிருந்ததென்றும், இதனைக் கண்ட சிவபாத இருதயர் மனம் வருந்திச் சிவபெருமானிடம் முறையிட்டார் என்றும், பௌத்த சமண மதங்களை அழித்துச் சைவசமயத்தைப் பரவச்செய்வதற்காகத் திருஞானசம்பந்தர் பிறந்தார் என்றும் பெரியபுராணம் கூறுகிறது.

> "மேதினிமேல் சமண்கையர் சாக்கியர்தம் பொய்பிகுந்தே
> ஆதி அரு மறைவழக்கம் அருகி,அரன் அடியார்பால்
> பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறா தொழியக்கண்டு
> ஏதமில்சீர் சிவபாத விருதயர்தாம் இடருழந்தார்."
>
> (பெரிய. திருஞானசம். 18)

இவ்வாறு அக்காலத்திலே, தமிழ்நாடு முழுவதும், பௌத்தமும் சமணமும் பரவிப் பெருகியிருந்ததாகச் சேக்கிழார் கூறுவது வெற்றுரையன்று; உண்மையே. மூவர் தேவாரத்தையும் தேவாரம் பெற்ற திருப்பதிகளின்

வரலாற்றையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால், பௌத்த மும் சமணமும் ஒவ்வொரு ஊரிலும் பரவியிருந்த செய்தியை யறியலாம். இந்த முறையில், யாம் ஆராய்ந்து பார்த்த வரையில், தேவாரம் பெற்ற திருப்பதிகளிலெல்லாம் மூவர் காலத்திலும், அதற்குப் பிற்பட்ட காலத்திலும் பௌத்த மதமும் சமண சமயமும் சிறப்புற்றிருந்த செய்தியைக் கண்டேன். ஆராய்ச்சி மனப்பான்மையுடையோர், தேவாரம் பெற்ற திருப்பதிகளின் சமய வரலாற்றை இக்கண்கொண்டு ஆராய்ந்து உண்மை காண்பாராக.

இனி, தமிழ்நாட்டிலே ஆங்காங்கு காணப்படுகிற **பஞ்சபாண்டவ மலை** அல்லது **பாண்டவக் குன்று** என்பனவற்றில் பெரும்பாலன, பண்டைக்காலத்திலே பௌத்த பிக்குகள் வசித்துவந்த மலைகள் என்பதை விளக்குவாம். தமிழ்நாட்டில் மட்டுமன்று, ஆந்திரநாட்டிலும் இத்தகைய பாண்டவர் குன்றுகள் உள்ளன. ஆதியில், பௌத்த பிக்குகள் வசிந்துவந்த இக்குகைகள், பௌத்தமதம் செல்வாக்கிழந்த பிறகு ஜைனர்களால் கைப்பற்றப்பட்டு, இவைகளில் சமணத் துறவிகள் வசித்து வந்தார்கள். பிற்காலத்திலே, சமணசமயமும் வீழ்ச்சியடைந்த பிறகு இக்குகைகள் "இந்து" சமயத்தவரால் கைப்பற்றப்பட்டு இந்துக்கோயில்களாக மாற்றப்பட்டன. இந்துக்கள் இக்குகைகளைக் கைப்பற்றிய பிறகு, இக்குகைகளில், பாரதக் கதையில் கூறப்படுகிற பஞ்சபாண்டவர் வனவாசம் செய்த காலத்தில் தங்கி வசித்ததாகக் கதைகள் கற்பிக்கப்பட்டு, இன்றளவும் பாமரர்களால் நம்பப்பட்டு வருகின்றன. பண்டவமலை அல்லது பண்டவகுன்று என்பது பழைய பெயர். பிற்காலத்தில், இப் பெயருடன் பஞ்சம் என்னும் அடைமொழி சேர்த்துப் பஞ்சபாண்டவமலை என்று வழங்கப்படுகின்றன. உண்மையில் பஞ்ச பாண்டவர்களுக்கும் இக்குகைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. பௌத்த பிக்குகள் வசித்துத் தவம் செய்த குகைகளாகும் இவை. பௌத்தர்கள் ஏன் இக்குகைகளுக்குப் **பண்டவமலை** என்று பெயரிட்டார்கள் என்பதன் காரணத்தைக் கூறுவாம்.

பிற்காலத்திலே, புத்தர் பெருமானாகத் திகழ்ந்த சித்தார்த்த குமரன், அரசையும் அரசபோகத்தையும் துறந்து துறவுபூண்ட உடனே, மகதநாட்டின் தலைநகரமான ராஜகிருகம் என்னும் நகரத்திற்கு வந்து, நகரத்தில் பிச்சை ஏற்றார். அக்காலத்தில் அந்நாட்டையாண்ட அரசன் பிம்பிசாரன் என்பவன். அவ்வரசனிடம், ஒற்றர்கள் சென்று கண்ணைக் கவரும் உருவமைந்த ஒரு பிக்கு நகரத்தில் பிச்சை ஏற்பதை அறிவித்தார்கள். அரசன் அவர்களை அனுப்பி அவர் எங்கே செல்கிறார்; என்ன செய்கிறார் என்பதைக் கண்டறியும்படி ஏவினான். பிச்சை ஏற்ற சித்தார்த்தர், அந்நகரத்தைச் சுற்றிலுமிருந்த ஐந்து மலைகளில் ஒன்றாகிய பண்டவமலை அல்லது பண்டவப்பதம் என்னும் குன்றின் அடிவாரத்தில் சென்று தாம் பிச்சை ஏற்ற உணவை உட்கொள்ளத் தொடங்கினார். அரண்மனையிலே இனிய உணவுகளை உண்டு பழகிய அவருக்கு, இப்பிச்சையால் கிடைத்த உணவை உண்பதற்கு மனம் இடந்தரவில்லை; வாய் குமட்டியது. ஆனாலும், தாம், துறவு பூண்டபடியால் இத்தகைய உணவைத்தான் உண்ணவேண்டும் என்று உறுதிகொண்டு மனம் பொறுத்துக்கொண்டு அதனை உண்டார். இவற்றையெல்லாம் ஒற்றரால் அறிந்த பிம்பிசார அரசன், அவர் இன்னார் என்பதையறிந்து அவரை யழைத்துத் தமது அரசாட்சியில் ஒரு பகுதியை அவருக்குக் கொடுப்பதாகவும், துறவறத்தை விட்டுவிடும்படியும் கூறினான். அதற்கு சித்தார்த்தர் இணங்காமல் காட்டிற்குச் சென்றுவிட்டார்.

இந்தச் சரித்திரத்தை அடிப்படையாகக்கொண்டது தான் நமது நாட்டில் உள்ள பண்டவமலைகள். சித்தார்த்தராகிய புத்தர்பெருமான், தமது துறவற வாழ்க்கையில் முதல் முதல் தங்கிய மலை பண்டவமலை. ஆகவே, அவரைப் பின்பற்றி வந்த பௌத்த பிக்குகள் தாம் வசித்த மலைகளுக்கும் மலைக்குன்றுகளுக்கும் பண்டவமலை அல்லது பண்டவகுன்று என்று பெயர் சூட்டியதில் வியப்பொன்றுமில்லை. என்னை? அந்தந்த சமயத்தவர் தத்தம் சமயச்

சார்பான பெயர்களைத் தத்தம் இடங்களுக்குச் சூட்டுவது வழக்கமாதலால் என்க. பௌத்த பிக்குகள், புத்தர் பெருமானுடைய மரபைப் பின்பற்றி வருவது இன்றும் காணலாம். உதாரணமாக, பௌத்தர் துறவு பூண்பதற்கு முன்னாள், தம்மை அரசகுமாரனைப் போன்று போக போக்கியமான உடைகளை அணிந்துகொள்வது வழக்கமாக இருந்து வருகிறது. இதன் காரணம் யாதெனின், சித்தார்த்த குமாரன் துறவு பூண்பதற்கு முன் நாள், இந்திரன் ஏவலால் விசுவகர்மன் வந்து அவருக்கு ஆடை அணிகளை அழகாக உடுத்தி அலங்காரம் செய்து சென்றான் என்பது புத்தர் வரலாறு. அம்முறைப்படி, இக்காலத்துப் பௌத்தர்களும், துறவுபூண்பதற்கு முன் நாள் தம்மை அரசகுமாரனைப்போன்று அலங்காரம் செய்துகொள்கிறார்கள். எனவே, பண்டவமலை என்பது சித்தார்த்தர் துறவுபூண்டு முதல் முதல் தங்கி வசித்தமலை என்பதும், அதனை நினைவு கூர்தற்பொருட்டுப் பௌத்த பிக்குகள் தாம் வசித்த குன்றுகளுக்குப் பண்டவமலை என்று பெயரிட்டனர் என்பதும் கருதத்தக்கது. பிற்காலத்திலே, பௌத்தமதம் மறைந்த பின்னர், பண்டவமலை என்பது பாண்டவமலை என்றாகி, பிறகு பஞ்சபாண்டவ மலையாகிவிட்டது.

நமது நாட்டில் உள்ள பண்டவ மலைகளில் சிலவற்றைக் கூறுவாம்:

அழகர் மலை: மதுரை ஜில்லா மேலூர் தாலூகாவில் உள்ளது. அதாவது மதுரைக்கு வடமேற்கே 12 மைலில் உள்ள அழகர் மலைத்தொடர். இங்கு, கிடாரிபட்டி, அழகர்மலை என்னும் இடங்களுக்கு இடையிலே, லோகல் போர்டு ரோடுக்கு வடக்கே 2 பர்லாங்கு தூரத்தில், பஞ்சபாண்டவ படுக்கை என்னும் குகையுண்டு. இது 50 கெஜம் அகலமும், 150 கெஜம் நீளமும் உடையது. தெற்குப் பார்த்த இக் குகை, கிழக்கு மேற்காக நீண்டிருக்கிறது. இக் குகையிலே, கற்பாறையில் கற்படுக்கைகள்

செதுக்கப்பட்டுள்ளன. அசோக சக்கரவர்த்தி காலத்து பிராமி எழுத்துக்கள் இங்குப் பாறையில் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வெழுத்துக்கள் கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை.*

அழகர்கோயிலில், ஆராமத்துக்கரை, ஆராமத்துக் குளம் என்னும் பெயர்கள், ஆதியில் அங்கு பௌத்தர்கள் இருந்தனர் என்பதைக் குறிக்கின்றன.

கோங்கர் புளியங்குளம்: மதுரை ஜில்லா, திருமங்கலம் தாலூகாவில் உள்ள இவ்வூர்க் குன்றில் ஒரு குகையுளது. அதாவது, மதுரைக்குத் தென்மேற்கு 9 மைலில் உள்ளது. இதற்குப் பஞ்சபாண்டவர் குகை என்று பெயர் வழங்குகிறது. இக் குகைக்குள், பிக்ஷுக்கள் படுத்துறங்குவதற்குக் கற்பாறையில் படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. கி. மு. 2 அல்லது 3-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பிராமி எழுத்துக்களும் இதில் காணப்படுகின்றன.†

கீழைவளவு: மதுரை ஜில்லா மேலூர் தாலூகா மேலூரில் இருந்து 6 மைலுக்கப்பால் உள்ளது. இங்குள்ள பஞ்சபாண்டவக் குன்றில் அசோக அரசர் காலத்துப் பிராமி எழுத்துக்கள் எழுதப்பட்டுள்ளன.‡

முத்துப்பட்டி: மதுரை ஜில்லா மதுரை தாலூகா வடபழங்கியைச் சேர்ந்த கிராமம். இங்குள்ள மலையில் பஞ்சபாண்டவர் படுக்கைகள் சுமார் 30 உள்ளன. பிராமி எழுத்துக்களும் சிதைந்து காணப்படுகின்றன.§

---

* 334 of 1908. Ep. Rep. 1909. Page 69 and 70. 70—76 of 1910. Ep. Rep. 1910. Page 66-77 and 80. Top. Ins. Vol. II, Page 1006.

† 55-57 of 1910. Ep. Rep. 1910. Page 76. Top. Vol. II P. 1038.

‡ Ep. Rp. 1910. p. 76. 135 of 1903. § Ep. Rep. 1910.

நாகமலை: மதுரை ஜில்லாவில் விக்கிரமமங்கலம் என்னும் ஊரில் உள்ளது. இங்கும் கற்படுக்கைகளும் பிராமி எழுத்துக்களும் காணப்படுகின்றன.*

திருப்பரங்குன்றம்: மதுரை ஜில்லா திருப்பரங் குன்றம் ரயில் நிலையத்திற்கும் காலடி என்னும் கிராமத் துக்கும் இடையில் உள்ள பேர்போன சுப்பிரமணியர் மலை. இக்குன்றின் மேற்குப் பக்கத்தில், செங்குத்தான பாறையில் குகையும் அதற்குள் ஆறு கற்படுக்கைகளும் உள்ளன. இக்குகைக்கு ஏறிச்செல்வது கடினம். இக் குகையில் பல ஆட்கள் தங்க இடம் உண்டு. கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பிராமி எழுத்துச் சாசனம் உண்டு.†

இம்மலையுச்சியில் உள்ள சிக்கந்தர் மசூதிக்கு மேற்கே நூறு கெஜத்துக்கப்பால் இன்னொரு சிறு குகையுண்டு. இக்குகையிலும் கிழக்கு மேற்காகக் குறுகிய 5 படுக்கை கள் செதுக்கப்பட்டுள்ளன.‡

இங்குள்ள குகையொன்றில், 999 பேருடன் நக்கீரரையும் ஒரு பூதம் சிறைப்பிடித்து வைத்திருந்ததாகக் கதை வழங்குகிறது.

சித்தர் மலை: மதுரை ஜில்லா மேட்டுப்பட்டியில் உள்ளது. வைகையாற்றுக்கு அருகில் உள்ள அழகான இடம். மலைமேல் இப்போது ஒரு சிவன் கோயில் உண்டு. இக்கோயிலிலிருந்து தெற்குப் பக்கமாகக் கீழே இறங்கும் பாதை வழியாகச் சென்றால் மலையின் மத்தியில் ஒரு குகை காணப்படுகிறது. இக்குகையின் முன்புறம் இப்போது சுவர் வைத்து அடைக்கப்பட்டிருக்கிறது. சிறு வழியே உள்புகுந்து சென்றால், குகைக்குள் 5 கற்படுக்கைகளைக் காணலாம். பிராமி எழுத்துச் சாசனங்களும் உள்ளன.§

* Ep. Rep. 1926-27 † 333 of 1908.
‡ Ep. Rep. 1909. p. 68, 69.
§ Ep. Rep. 1908. p. 58 and 59. 45 of 1908.

விருச்சியூர்: மதுரை ஜில்லா விளத்தூருக்குக் கிழக்கே ஒரு மைல் தூரத்தில் உள்ளது. இவ்வூர்க் குன்றுகள் ஒன்றில் இரண்டு குகைகள் உள்ளன. மற்றொரு நீண்ட பாறையில் இயற்கையா யமைந்த குகையொன்றுண்டு. இங்குக் கற்படுக்கைகள் பல அமைக்கப்பட்டுள்ளன. பாறையில் 30 அடி உயரத்தில் பிராமி எழுத்துக்களும் காணப்படுகின்றன.*

குன்னக்குடி: மதுரை ஜில்லா திருப்பத்தூர் தாலூகா. இங்குள்ள குன்றின்மேல் சுப்பிரமணியர் கோயிலும், மேற்குப் பக்கத்தில் பஞ்சபாண்டவர் குகையும் உள்ளன. குகையில் கற்படுக்கைகளும் பிராமி எழுத்துக்களும் உள்ளன.†

ஆனைமலை: மதுரை ஜில்லா. இம்மலைமேல் பஞ்சபாண்டவர் குகையும் கற்படுக்கைகளும் உள்ளன. பிராமி எழுத்துக்களும் எழுதப்பட்டுள்ளன ‡

கி. பி. 7-ஆம் நூற்றாண்டிலே, திருஞானசம்பந்தர் காலத்தில் இம்மலையில் சமணர் இருந்தார்கள் என்று தேவாரத்தினால் அறிகிறோம்.

வீரசிகாமணி: திருநெல்வேலி ஜில்லா சங்கரநயினார் கோயிலுக்கு 8 மைலுக்கப்பால் உள்ளது. இவ்வூர்ப் பாறையில் பஞ்சபாண்டவர் குகையுண்டு. கற்படுக்கைகள் உள்ளன.§

மருகால்தலை: திருநெல்வேலி ஜில்லா பாளையங்கோட்டைக்கு 10 மைல் தூரத்தில் உள்ளது. இவ்வூரில் உள்ள பூவில் உடையார்மலையில் உள்ள குகையில் கற்படுக்கைகளும் அசோகர் காலத்துப் பிராமி எழுத்துக்களும் செதுக்கப்பட்டுள்ளன.$

---

* 38 of 1907. Ep. Rep. 1908. p. 58.

† 44 of 1909. p. 70. Ep. Rep. 1910. p. 80.

‡ Ep. Rep. 1907. p. 60 & 61.

§ Ep. Rep. 1908. p. 91. $ Ep. Rep. 1909. p. 60.

ஆறுநாட்டார் மலை: திருச்சி ஜில்லா கரூர் தாலூகா கரூருக்குச் சில மைல் தூரத்தில் உள்ள புகழூரில் இருக்கிறது. இம்மலைமேல் சுப்பிரமணியர் கோயில் இருக்கிறது. இங்கு இயற்கையா யமைந்த குகையில் கற்படுக்கைகளும், கி. மு. 3-ஆம் நூற்றுண்டில் எழுதப்பட்ட பிராமி எழுத்துக்களும் உள்ளன.*

திருச்சிராப்பள்ளி: இம்மலைமேல் பேர்பெற்ற தாயுமானவர் கோயிலும், உச்சிப்பிள்ளையார் கோயிலும் சில குகைகளும் உள்ளன. இக்குகைகள் ஒன்றில் கற்படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன.

இன்னும் பல பாண்டவ மலைகளைக் கூறலாம். விரிவஞ்சி விடுகின்றோம். தமிழ் நாட்டில் மட்டுமன்று; ஆந்திர நாட்டிலும் பாண்டவ மலைகள் சில உள்ளன. அவற்றில் ஒன்று ராஜமந்திரிக்கு 25 மைல் வடக்கில் உள்ள ரம்ப எர்ரபாளம் என்னும் கிராமத்தில் உள்ள குன்றுகளில் பாண்டவுல மெத்த என்னும் பெயரோடு ஒரு குன்று உள்ளது. இதற்கடுத்த குன்றுகளில் பௌத்த விகாரைகளும், பள்ளிகளும் இடிந்து அழிந்து காணப்படுகின்றன. எனவே, இப்போது பஞ்சபாண்டவ மலை என்று வழங்கும் மலைகளில் பண்டைக்காலத்தில் பௌத்த பிக்குகள் வசித்து வந்தனர் என்பதும், இவற்றின் பழைய பெயர் பண்டவ மலை என்பதும், பாரதக் கதையின் பஞ்சபாண்டவருக்கும் இம்மலைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதும் விளங்குகிறது.

இதுபோலவே, கழுகுமலை அல்லது கழுக்குன்றம் என்னும் பெயருள்ள மலைகளும் ஆதியில் பௌத்த பிக்குகள் தங்கியிருந்த இடங்களாகும். புத்தபகவான் தங்கியிருந்த ஒரு மலையின் பெயர் கிஜ்ஜகூடம் என்பது. இதுவும் மகதநாட்டின் தலைநகரமான ராஜகிருக நகரத்தைச் சூழ்ந்திருந்த ஐந்து மலைகளில் ஒன்று. இந்த கிஜ்ஜகூட மலையில் அநேக கழுகுகள் வசித்துவந்தன. ஆகவே, கிஜ்ஜகூடம் அதாவது கழுகுமலை என்று இம்மலைக்குப் பெயர்

---

* Ep. Rep. 1927, p. 50.

வந்தது. பண்டவமலையில் புத்தர் தங்கியதுபோலவே, கிஜ்ஜகூட மலையிலும் அவர் அடிக்கடி தங்கியிருந்தார். இம்மலைக்குகையில் தங்கியிருந்தபோது புத்தரை மாரன் என்னும் தேவதை அச்சுறுத்தினான்; புத்தர் அஞ்சாமல் வீற்றிருந்தார். மாரன் வெட்கி ஓடினான். புத்தர் இந்த மலையடிவாரத்தில் உலாவிக்கொண்டிருந்தபோது, அவரைக் கொல்லுவதற்காக தேவதத்தன் என்பவன் இம்மலையுச்சியிலிருந்து பெரும்பாறையை யுருட்டி வீழ்த்தினான். அப் பாறை இவர்மேல் படவில்லை. ஆனால், சிறு கல் சிதறி வந்து இவரைக் காயப்படுத்தியது. அன்றியும், இந்தக் கிஜ்ஜகூடமலையில் இருந்தபோதுதான், ஜீவகன் என்னும் மருத்துவன் புத்தருக்கு பேதிமருந்து கொடுத்து அவரது உடல் நலத்தைக் காத்தான். புத்தர் இந்த மலையில் இருந்த போதுதான் சம்பாதி என்னும் பிரமனும், சக்கன் எனப் படும் இந்திரனும், அவனது பாணனாகிய பஞ்சசிகாவும், இந்தன் என்னும் இயக்கனும், சாதுர்மகாராஜிகர்களும் புத்தரிடம் வந்து அவரை வணங்கிச் சென்றார்கள். இந்த கிஜ்ஜகூடமலையில் புத்தர் இருந்தபோதுதான் மாகன் என்பவன்பொருட்டு மாக சூத்திரத்தையும், அபயராஜ குமாரன்பொருட்டு அபய சூத்திரம் எனப்படும் கிஜ்ஜகூட சூத்திரத்தையும், தம்மிகன்பொருட்டுத் தம்மிக சூத்திரத்தையும் அருளிச்செய்தார். புத்தருடைய முக்கிய சீடர்களாகிய சாரிபுத்தர், ஆநந்தர், மகா கஸ்ஸபர், அநுருத்தர், புன்ன, உபாலி, சந்த, சன்ன, மொக்கல்லானர் முதலானவர்களும் இந்த கிஜ்ஜகூடம் என்னும் கழுகுமலையில் சில காலம் வசித்து வந்தார்கள். ஆகவே, இவ்வளவு சிறப்புடையதான கழுகுமலையின் பெயரைப் பௌத்தப் பிக்குகள் தாம் வசித்த மலைகளுக்குச் சூட்டி வழங்கியது வியப்பு அன்று.

செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள திருக்கழுக்குன்றம் என்னும் மலை ஆதிகாலத்தில் பௌத்த பிக்குகள் வசித்த இடம் என்று தோன்றுகிறது. மதுரை ஜில்லா மதுரை தாலூகாவில் மாங்குளம் என்னும் கிராமத்தில் கழுகுமலை

என்னும் குன்றுகள் உள்ளன. இக்குன்றுகளில் நான்கு குகைகள் உள்ளன. குகைகளில் கற்படுக்கைகளும் பிராமி எழுத்துக்களும் காணப்படுகின்றன.*

கிஜ்ஜகூடம் என்னும் கழுகுமலைகள் ஆந்திரநாட்டிலும் உள்ளன. அவை முற்காலத்தில் பௌத்தர்களின் இடமாக இருந்தன என்பதற்குச் சான்றுகள் காணப்படுகின்றன. தமிழ்நாட்டில் இன்னும் பல இடங்களில் பௌத்தச் சார்பான சான்றுகள் காணப்படுகின்றன. ஆராய்ச்சி மனப்பான்மையுடையோர் அவைகளை ஆராய்ந்து காண்பார்களாக.

தமிழ்நாட்டில் இருந்த பௌத்த திருப்பதிகள் இவை மட்டும் என்று கருதவேண்டா. இன்னும் பல பௌத்த ஊர்கள் உள்ளன. அவற்றை ஆராய்ந்தெழுத நேரம் இன்மையால் அவற்றை இங்குக் கூறவில்லை. இதில் ஆசையுள்ளவர் ஆராய்ந்து காண்பாராக.

இப்போது மலையாள நாட்டில் ஆங்காங்கே 'சாத்தன் காவு' என்றும், 'ஐயப்பன் கோயில்' என்றும் சொல்லப்படும் கோயில்கள் பல உண்டு. இவை முற்காலத்தில் பௌத்தக் கோயில்களாயிருந்தன என்று சிலர் கருதுகின்றார்கள். 'சாத்தன்' என்பது 'சாஸ்தா' என்பதன் திரிபு. சாஸ்தா என்பதும் புத்தருக்குப் பெயர். காவு அல்லது கா என்பது தோட்டம். எனவே, 'சாத்தன் காவு' என்றால், புத்தரது தோட்டம் என்பது பொருள். பண்டைக்காலத்தில் பூந்தோட்டங்களுக்கிடையே புத்த கோயில்கள் அமைப்பது வழக்கம். பௌத்தப் பள்ளியுள்ள பூந்தோட்டத்தைப் பௌத்தர் 'ஆராமம்' என்பர். 'ஆராமம்' என்றால், தோட்டம் அல்லது கா என்பதே (தொடர்புரை 2 காண்க.)

இவையன்றியும், தமிழ்நாட்டிலே மானூர், துடிதபுரம் என்னும் ஊர்களில் பௌத்தப் பள்ளிகள் இருந்தனவாகத் தெரிகின்றன. இந்த ஊர்கள் எங்கிருந்தன

* Ep. Rep. 1907. p. 61. Top. Vol. II p. 994.

என்பது விளங்கவில்லை. தக்கயாகப்பரணி உரையில் பௌத்தபுரம் என்னும் ஓர் ஊர் கூறப்படுகின்றது. இது வும் எந்த இடத்தில் இருந்ததென்று தெரியவில்லை.

திருச்சாணத்துமலை: திருவாங்கூர் நாட்டில் உள்ளது. இங்கு இப்போதுள்ள பகவதிகோயில், முற்காலத்தில் ஜைனக்கோயிலாகவும், அதற்கு முன்பு பௌத்தக் கோயி லாகவும் இருந்தது.

ஸ்ரீமூலேஸ்வரம்: திருவாங்கூர் நாட்டில் இருந்தது இவ்விடத்தில் மூலசோமவிகாரை என்னும் பேர்பெற்ற புத்த பள்ளி இருந்ததாக மூஷிகவம்சம் என்னும் நூலும், ஒரு கல்வெட்டுச் சாசனமும் கூறுகின்றன. இந்த மூலசோம விகாரையின் சில பகுதிகள் கடலினால் அழிக்கப் பட்டன.

இவையன்றியும் மலையாள நாட்டில் பல இடங்களில் புத்த விக்கிரங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

---

## 8. இந்து மதத்தில் பௌத்தமதக் கொள்கைகள்

தமிழ் நாட்டிலே, ஏன்? இந்தியாவிலேயே பௌத்த மதம் இப்போது மறைந்துவிட்டது. அந்த மதம் மறைந்துவிட்டபோதிலும், அதன் பெரிய கொள்கைகளில் பல நாளிது வரையில் இந்து மதத்தில் நின்று நிலைபெற்று வருகின்றன. பௌத்த மதக்கொள்கைமட்டுமன்று, பண்டைத் திராவிடரின் சமயக் கொள்கைகளும், ஜைனரின் மதக் கொள்கைகளும் இப்போதைய இந்து மதத்தில் கலந்து காணப்படுகின்றன. அவ்வக்காலத்தில் நடைமுறையிலிருந்த சிறந்த கொள்கைகளை இந்துமதம் தன்னிடத்தில் ஏற்றுக்கொண்டிருக்கின்றது. இஸ்லாம் மதத்தையும் இந்து மதத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாகச் சேர்க்க அக்பர் சக்கரவர்த்தி காலத்தில் முயற்சி செய்யப்பட்டு, 'அல்லா உபநிஷத்' என்னும் ஒரு புதிய உபநிஷத்து இயற்றப்பட்டது என்பது ஈண்டு நினைவுகூரற்பாலது. இது நிற்க:

பௌத்த மதக்கொள்கைகள் பல இந்து மதத்தில் நின்று நிலவுகின்றனவென்று சொன்னோம். அவை எவை என்பதை இங்கு ஆராய்வோம். இக்காலத்தில் இந்துக்கள் அவை பௌத்தமதக் கொள்கைகள் என்பதை முழுவதும் மறந்துவிட்டார்கள். இந்து மதத்தில் காணப்படும் பௌத்த மதக் கொள்கைகளாவன:—

### க. புத்தரை அவதாரமாக ஏற்றுக்கொண்டது:

இந்து மதம் பௌத்தமதத்தை அழித்துவிட்ட போதிலும், அந்த மதத்தை உண்டாக்கின புத்தரை ஒரு தெய்வமாக ஏற்றுக்கொண்டது. அதாவது, புத்தர் திருமாலின் அவதாரங்களில் ஒருவரென்று ஒப்புக்கொண்டுவிட்டது. ஏன் ஒப்புக்கொண்டது? புத்தரின் உருவ வழிபாடு அக்காலத்து மக்களிடையே வேரூன்றியிருந்தபடியால், பௌத்த மதத்தை அழித்துவிட்டபோதிலும், புத்தரைத் தெய்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டிய கட்டாயம் இந்து மதத்திற்கு ஏற்பட்டதுபோலும்!

இந்து மதத்தின் ஒரு பிரிவான வைணவ மதம் புத்தரைத் திருமாலின் ஓர் அவதாரமாக ஏற்றுக்கொண்டது போலவே, மற்றொரு பிரிவாகிய சைவசமயமும் புத்தரைத் தனது தேவர்களில் ஒருவராக ஏற்றுக்கொண்டது. சாஸ்தா, அல்லது ஐயனார் என்னும் பெயருடன் புத்தரைத் தனது தேவர்களில் ஒருவராகச் சேர்த்துக்கொண்டு, பின்னர், முருகர், அல்லது சுப்பிரமணியரோடு புத்தரை ஒற்றுமைப்படுத்திக்கொண்டது. புத்தருக்குத் தருமராசன் என்றும், விநாயகன் என்றும் பெயர் உள்ளன. இப்பெயர்களை நிகண்டுகளிலும் காணலாம். தருமராசன் என்னும் பெயருடன் இருந்த பௌத்தக் கோயில்களைப் பிற்காலத்தில், பாரதத்தில் கூறப்படும் பஞ்சபாண்டவரைச் சேர்ந்த தருமராசன் கோயிலாக மாற்றிவிட்டனர். அதுபோலவே, விநாயகன் என்னும் பெயருடன் இருந்த புத்தர் கோயில்களை விநாயகர் (பிள்ளையார்) கோயிலாகவும் மாற்றிவிட்டார்கள். துடிதலோகத்தில் எழுந்தருளியிருந்த அவலோகிதர் எனப்படும் போதிசத்துவர், புத்தராக மாயாதேவியின் திருவயிற்றில் வந்து அமர்ந்தபோது, வெள்ளையானைக் கன்று உருவமாக வந்தார் என்று பௌத்த நூல்கள் கூறுகின்றன. பௌத்தமதம் செல்வாக்குக் குறைந்த பிற்காலத்தில், விநாயகர் என்னும் பெயருடைய புத்தக் கோயில்கள் விநாயகர் (பிள்ளையார்) ஆலயங்களாக மாற்றப்பட்டன. பழைய சைவசமயத்தில் விநாயகர் வணக்கம் கிடையாதென்றும், கி. பி. 6-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு விநாயகர் வணக்கம் சைவசமயத்தில் புதிதாகப் புகுத்தப்பட்டதென்றும் சைவப்பெரியார் உயர்திரு மறைமலையடிகள் போன்ற அறிஞர்கள் கூறுவதும் ஈண்டு கருதத்தக்கது. (தொடர்புரை 3 காண்க.)

## பௌத்த சிறுதெய்வங்களை இந்துமதம் ஏற்றுக்கொண்டது:

மணிமேகலை, சம்பாபதி, தாராதேவி முதலிய சிறு தெய்வங்கள் பண்டைக்காலத்தில் பௌத்தர்களால் வணங்கப்பட்டுவந்தன. இந்தத் தெய்வங்களின் கோயில்களை,

இந்துக்கள் பிற்காலத்தில் கைப்பற்றிக்கொண்டு, இவைகளுக்குக் காளி, பிடாரி, திரௌபதையம்மன் என்னும் புதுப்பெயர்கள் சூட்டிக் கிராமதேவதைகளாக்கிக் கொண்டனர். காஞ்சீபுரத்தில் வீடுபேறடைந்த மணிமேகலை என்னும் காவியத் தலைவியாகிய மணிமேகலை ஆலயந்தான் காஞ்சி காமாட்சியம்மன் ஆலயத்தில் உள்ள அன்னபூரணி அம்மன் என்றும், காஞ்சி காமாட்சியம்மன் ஆலயம் பௌத்தரின் தாராதேவியம்மன் கோயில் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். அவ்வாறே, ஆங்காங்குத் திரௌபதையம்மன் ஆலயம் என்னும் பெயருடன் இப்போது இருக்கும் ஆலயங்கள் எல்லாம் பண்டைக்காலத்தில் தாராதேவியாலயங்களாக இருந்தன என்றும் கூறுவர். (மணிமேகலை, சம்பாபதி முதலிய பௌத்தத் தெய்வங்களைப்பற்றிய தொடர்புரை 4 காண்க.)

## உ. வேள்வியில் உயிர்க்கொலை நீக்கியது :

யாகங்களில் ஆடு மாடு முதலியவற்றைக் கொல்வது பெரும்பாவமென்பது பௌத்தமதக் கொள்கை. அதற்கு நேர்மாறாக, யாகங்களில் ஆடு மாடு குதிரை முதலியவற்றைப் பலியிடவேண்டுமென்பது பிராமண மதத்தின் கொள்கையாக இருந்துவந்தது. கடைசியாக, வைதீக பிராமண மதம் தனது கொள்கையை விட்டுக்கொடுத்து, பௌத்த மதக் கொள்கையாகிய கொல்லாமையை ஏற்றுக்கொண்டது. அன்றியும், பிராமணர் மாமிசம் உண்டுவந்ததையும் நிறுத்திச் 'சைவ' உணவை உண்ணும்படி செய்ததும் பௌத்தமதந்தான். வைதீக மதத்தார் மாமிசம் உண்பதையும் யாகங்களில் உயிர்க்கொலை செய்வதையும் தடுத்து, அவற்றை நிறுத்தச் செய்த பெருமை பௌத்த மதத்திற்குமட்டுமன்று, ஆருகத மதத்திற்கும் உரியதாகும்.

## ௩. அரசமரத்தைத் தொழுதல் :

'போதி' என்னும் அரசமரம் பௌத்தர்களுக்குப் புனிதமானது. ஏனென்றால், அரசமரத்தடியில் இருந்த

காலத்தில்தான் புத்தருக்கு மெய்யறிவு உண்டாயிற்று. ஆகையால், பௌத்தர்கள் அரச மரத்தைப் புத்தரைப் போலவே போற்றி வணங்குவர். புத்தரைக் கூறும்போது, 'மருள் அறுத்த பெரும்போதி மாதவன்' என்றும், 'பவளச் செஞ்சுடர் மரகதப் பாசடை, பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும், போதியந் திருநிழற் புனிதன்' என்றும், 'பாசடைப் போதிப் பேரருள் வாமன்' என்றும், 'வாடாப் போதி மரகதப் பாசடை மரநிழல் அமர்ந்தோன்' என்றும், அரசமரத்துடன் அவரைத் தொடர்புபடுத்தியே நூல்கள் கூறுகின்றன. பௌத்தரைப் 'போதியர்' (அரச மரத்தைத் தொழுவோர்) என்று 'தேவாரம்' கூறுகின்றது. சங்ககாலத்திலிருந்த ஒரு பௌத்தப் புலவருக்கு 'இளம் போதியார்' என்னும் பெயர் இருந்ததும் ஈண்டு நினைவு கூரற்பாலது. அன்றியும், 'புத்தர்மேல் பத்திக்குக் காரணமான போதி விருட்சம் நின்னால் (பௌத்தரால்) புத்தனோ பாதி (புத்த சம்பந்தமானது) என்று தொழப்பட்டவாறு போல்' எனவும், 'புத்த பத்தி நிமித்தமாக போதி விருட்சம் தொழுமாறு போல்' எனவும் வருகின்ற நீலகேசி உரைப் பகுதிகளாலும் பௌத்தர் அரசமரத்தைத் தொழுதுவந்த செய்தி அறியப்படும். இந்து மதம் பௌத்த மதத்தை அழித்துவிட்டதெனினும், பௌத்தமதக் கொள்கையாகிய அரசமர வணக்கம் ஒழிக்கப்படாமல், இன்றளவும் போற்றப்பட்டு வருகின்றது. அரசமரத்தை வலம் வந்து வணங்குகின்ற இக்காலத்து இந்துக்கள், இந்த வணக்கத்தை உண்டாக்கியவர் பௌத்தர் என்பதை அறியார். ஆனால், இவ்வணக்கத்தை உண்டாக்கியவர் பௌத்தர் என்பது மறுக்கமுடியாத உண்மை.

௪. மடங்கள் ஏற்படுத்தியது:

சைவ, வைணவ, ஸ்மார்த்த மதத்தினர் மடங்களை அமைத்து, அவற்றில் தத்தம் மதத்தலைவர்கள் இருந்து சமயத்தொண்டாற்ற ஏற்பாடு செய்திருக்கின்றார்கள். இவைகளுக்கு 'மடம்' என்றும், 'சிம்மாசனம்' என்றும், 'பீடம்' என்றும் பெயர்கள் வழங்கிவருகின்றன. இந்நிலையங்கள்

பௌத்தரின் பள்ளிகளைப் பின்பற்றி அமைக்கப்பட்டவை என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு. பௌத்த மதத்தின் உயிர் நாடியாயிருந்தது சங்கம். சங்கம் என்பது பௌத்தத் துறவிகளின் கூட்டம். இந்தத் துறவிகள் ஊர்தோறும் விகாரை அல்லது மடங்களை அமைத்து, அவற்றில் தங்கி, நாட்டுமக்களுக்கு மதபோதனை செய்து தங்கள் சமயத்தைப் பரவச் செய்துவந்தார்கள். இந்த நிலையங்களை முதல் முதல் உண்டாக்கிய பெருமை புத்த தேவருக்கே உரியது. புத்தர் இந்த நிலையங்களை உண்டாக்குவதற்கு முன்னே, துறவிகளும் சமயத் தலைவர்களும் காடுகள், மரச்சோலைகள் முதலிய இடங்களில் வசித்துவந்தனர். பின்னர், பௌத்த மடங்களைப் பின்பற்றி, ஏனைய சமயத்தவரும் மடங்கள் அமைக்கும் வழக்கத்தை மேற்கொண்டனர்.

## ரு. அத்வைதம் உண்டானது:

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சங்கராசாரியாரால் உண்டாக்கப்பட்ட 'மாயாவாத மதம்' என்றும், 'ஏகான்மவாத மதம்' என்றும், 'ஸ்மார்த்த மதம்' என்றும் சொல்லப்படுகின்ற 'அத்வைத மதத்தின்' அடிப்படையான கொள்கை மகாயான பௌத்த மதத்திலிருந்து ஏற்றுக் கொள்ளப்பட்டதாக அறிவிற்சிறந்த ஆன்றோர் கூறுகின்றார். அத்வைத மதத்தை உண்டாக்கின சங்கராசாரியார் பௌத்த குரு ஒருவரிடம் பயின்ற மாணவர் என்று சிலர் கூறுவர். அங்ஙனம் அன்று; சங்கராசாரியாரின் குரு கோவிந்தபாதர் என்றும், கோவிந்தபாதரின் குரு கௌடபாதர் என்னும் பௌத்தர் என்றும் வேறு சிலர் கூறுவர். அன்றியும்,பௌத்தமதத்தின் பிரிவுகளானவிஞ்ஞானவாத, சூனியவாத மதங்கள் அதிகமாகப் பரவியிருந்த சௌராஷ்டிர தேசத்தில் சங்கரர் கல்வி பயின்றார் என்றும், அங்குப் பயின்றபடியினால்தான் சூனியவாத பௌத்தத்தினின்று மாயாவாதக் கருத்தினைப் பெற்றுக்கொண்டார் என்றும் மற்றுஞ் சிலர் கூறுவர். இவர் எவ்விடத்தில் யாரிடத்தில் கல்வி பயின்றார் என்னும் ஆராய்ச்சியிற் புகவேண்டுவதில்லை இவர் தமது மாயாவாதக் கொள்கையைப் பௌத்த

மதத்தினின்று பெற்றுக்கொண்டார் என்பதுமட்டும் உறுதியே. ஏனென்றால், வைணவ ஆசாரியருள் தலைசிறந்தவரும், ஸ்ரீபாஷ்யம் அருளிச்செய்தவருமான இராமானுசர், சங்கராசாரியாரின் அத்வைத மதத்தைப் 'பிரச்சன்ன பௌத்தம்,' அதாவது மாறுவேடம் பூண்டுவந்த பௌத்தம் என்று கூறியிருக்கின்றார். துவைத மதத்தின் தலைவராகிய மாத்வாசாரியாரும் அவ்வாறே சங்கரரின் அத்வைத மதத்தைப் 'பிரச்சன்ன பௌத்தம்' என்று கூறியிருக்கின்றார். பதுமபுராணத்தின் உத்தரகாண்டத்திலும் சங்கராசாரியாரின் மாயாவாத மதம் பிரச்சன்ன பௌத்தம் என்றே கூறப்படுகின்றது. இதனால், அத்வைத மதத்தின் அடிப்படையான கொள்கைகள் பௌத்தமதத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப்பட்டன என்பது நன்கு விளங்குகின்றது.

மேலே காட்டிய ஐந்து கொள்கைகளும் பௌத்தமதத்தைச் சார்ந்தவை என்பதும், அக்கொள்கைகள் இந்து மதத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்றளவும் நிலைபெற்றிருக்கின்றன என்பதும் விளக்கப்பட்டன. இதினின்று நாம் அறியக்கிடப்பது யாது? இந்துமதம் பௌத்தமதத்தை அழித்துவிட்டது; ஆனால், பௌத்தமதக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு இன்றளவும் கையாண்டு வருகின்றது என்பதே. பௌத்தமதம் தோல்வியுற்றது; ஆனால், அதன் கொள்கை வெற்றிபெற்றது.

---

## ௧௨. பௌத்தரும், தமிழும்

வடநாட்டிலிருந்து தென்னாட்டில் வந்த மதங்களைப் பண்டைப் பெரியோர் இரண்டு வகையாகப் பிரித்திருக்கின்றனர். அவை பிராமண மதம், சிரமண மதம் என்பன. பிராமணமதம் என்பது வைதீக மதம். சிரமண மதம் என்பது பௌத்த ஜைன மதங்களாகும். 'சிரமணம்' என்னும் சொல் தமிழில் 'சமணம்' என வழங்கும். 'சமணமதம்' என்றால், ஜைனமதத்துக்குமட்டும் பெயராக இக்காலத்தில் பெரும்பான்மையோரால் கருதப்படுகிறது. ஆனால், 'சமணம்' என்னும் சொல், வைதீக மதத்தவரல்லாத பௌத்தர் ஜைனர் மதங்களுக்குப் பொதுப் பெயராகப் பண்டைக்காலத்தில் வழங்கிவந்தது.

சமணர்களாகிய பௌத்த ஜைனர்கள் தங்கள் மதக் கொள்கைகளை உலகத்திலுள்ள மக்கள் எல்லோரும் அறிய வேண்டும் என்னும் விரிந்த மனப்பான்மை உடையவர்கள். ஆகையால், அந்தந்த நாடுகளில் பேசப்படும் தாய்மொழிகளில் தங்கள் சமய உண்மைகளை எழுதியும் பேசியும் வந்தார்கள். பிராமணர்களோ அத்தகைய விரிந்த மனப்பான்மை உடையவர்களல்லர். அதற்கு மாறாக, தமது மதத்தைத் தாங்கள்மட்டும் அறியவேண்டும் என்னும் எண்ணமுடையவர்கள். பொதுமக்கள் அறியாத சம்ஸ்கிருத மொழியில் தங்கள் மதக்கொள்கைகளை எழுதி வைத்துக்கொண்டதோடு, அந்த நூல்களைப் பிராமணரல்லாதவர்கள் படிக்கவும்கூடாது, பிறர் படிப்பதைக் காதால் கேட்கவும்கூடாது. அப்படிச் செய்வராயின், அவரைக் கடுமையாகத் தண்டிக்கவேண்டும் என்று சட்டமும் எழுதிவைத்துள்ளார்கள்.

பரந்த உயர்ந்த பெரிய நோக்கமும், மனப்பான்மையும் கொண்டவர்களான பௌத்த ஜைனர்கள் தங்கள் மதக் கொள்கைகளை எல்லோரும் அறியவேண்டும் என்னும் நல்லெண்ணமுடையவர்களாதலின், அவர்கள் தங்கள் மத நூல்களை அந்தந்த நாட்டுத் தாய்மொழிகளில் மொழி

பெயர்த்து வைத்தார்கள். நாட்டுமக்கள் அறியாதபடி வேறொரு மொழியில் மதக்கொள்கைகளை மறைத்து வைப்பது மன்னிக்கமுடியாத பெரும்பாவம் என்பது அவர்களின் கொள்கை. இக்கொள்கையை விளக்கக் கீழ்க்கண்ட வரலாறுகளே போதுமானவை.

பௌத்தர்களுக்குரிய 'சுல்லவக்க' என்னும் பாலி மொழி நூலில் இச்செய்தி காணப்படுகிறது :—

பௌத்த மதத்தைச் சேர்ந்த இரண்டு பார்ப்பனத் துறவிகள் புத்ததேவரிடம் சென்று, 'புத்தரின் வாய்மொழிகளை வெவ்வேறு நாட்டிற் சென்று போதித்துவருகிற தேரர்கள் அந்தந்த நாட்டுத் தாய்மொழியில் உபதேசம் செய்கிறபடியால், புத்தர்மொழிகள் கெட்டுப்போகின்றன. ஆகையால், புத்தரின் உபதேசங்களைச் சந்தபாஷையில் எழுதிவைப்போமாக!' என்றனர். இங்குச் 'சந்தம்' என்பது சம்ஸ்கிருத சுலோகம். சம்ஸ்கிருத சுலோகத்தில் புத்தர் உபதேசங்களை அமைத்து எழுதவேண்டும் என்று கூறியதாகக் கருத்து. கௌதம புத்தர் இவர்களது வேண்டுகோளினை மறுத்து, 'நீங்கள் புத்தரின் வாய்மொழிகளைச் சந்தபாஷையில் அமைத்து எழுதக்கூடாது; அப்படிச் செய்கிறவர் யாராயிருந்தாலும் தீங்குசெய்த குற்றத்திற்குள்ளாவர். புத்தரின் வாய்மொழிகளை ஒவ்வொருவரும் அவரவரது தாய்மொழியிலேயே அறிய வேண்டும்,' என்றனர்.

இதனால் புத்தரின் விரிந்த மனப்பான்மை நன்கு விளங்குகின்றது. இந்தக் கொள்கையைப் பின்பற்றிப் பிற்காலத்துப் பௌத்தர்களும் அந்தந்த நாட்டுத் தாய்மொழிகளில் பௌத்தக் கொள்கையைப் போதித்துவந்தனர்.

ஜைன சமயத்தவரும் இவ்வாறே பரந்த மனப்பான்மையுள்ளவராய், அந்தந்த நாட்டுத் தாய்மொழியிலேயே தங்கள் மதநூல்களை எழுதிவந்தார்கள். இதனை, சித்தசேன திவாகரர் என்னும் ஜைன முனிவரின் வரலாற்றிலிருந்து நன்கறியலாம். (சித்தசேன திவாகரர் வரலாற்றைச் **சமணமும் தமிழும்** என்னும் நூலில் காண்க.)

இவ்வாறு, தாய்மொழி வாயிலாகத் தமது மதக்கோட்பாட்டினை உலகத்தில் பரவச்செய்யுங் கருத்துடையவரான பௌத்தர்கள் எங்கெந்த நாட்டிற்குச் சென்றார்களோ, அந்தந்த நாட்டு மொழிகளைக் கற்று, அந்தந்த மொழிகளில் மத நூல்களையும் பிற நூல்களையும் இயற்றிவைத்தார்கள். இந்த முறையில் இவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு தமிழர்களால் மறக்கற்பாலதன்று. அன்றியும், சிறுவர்களின் கல்வியைப் பற்றியும் இவர்கள் கருத்தினைச் செலுத்தி, அவர்களுக்குத் தாய்மொழியை எழுதப்படிக்கக் கற்பித்துவந்தார்கள். நாம் இப்பொழுது வழங்குகிற, 'பள்ளிக்கூடம்' என்னும் சொல்லே, இவர்கள் கல்வியைப் பரப்புவதற்காகச் செய்துவந்த முயற்சியை இனிது விளக்குகின்றது. 'பள்ளி' என்னும் பெயர்க்குப் பௌத்த ஜைனத் துறவிகள் வாழும் மடம் என்பது பொருள். பௌத்த ஜைனத் துறவிகள் தாங்கள் வாழும் பள்ளிகளின் கூடங்களில் பாடசாலைகளை வைத்துப் பாடஞ் சொல்லிவந்தமையால், பாடசாலைக்குப் 'பள்ளிக்கூடம்' என்னும் பெயர் உண்டாயிற்று. பௌத்த ஜைன மதங்கள் மறைந்து பல நூற்றாண்டுகள் கழிந்தும், இன்றளவும் 'பள்ளிக்கூடம்' என்னும் சொல் தமிழ் நாட்டில் வழங்கிவருகின்றது.

இவ்வாறு சொல்வதால், பௌத்த ஜைனர்கள் வருவதற்கு முன்னே தமிழ்நாட்டில் கல்விச்சாலைகள் கிடையாவென்று சொன்னதாகக் கருதவேண்டா. சமணர்கள் தமிழ்நாடு வருவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே, தமிழர்கள் கிராமங்கள்தோறும் கல்விச்சாலைகள் அமைத்து நடத்திவந்தனர். சிறுவர்களுக்குக் கல்விகற்பித்த ஆசிரியருக்குக் 'கணக்காயர்' என்ற பெயர் சங்கநூல்களில் காணப்படுகின்றது. பின் ஏன் இதனை இங்குக் குறிப்பிட்டோமென்றால், பௌத்தர்களும் ஜைனர்களும் தாய்மொழிக் கல்வியைப் பரவச்செய்ய அதிகமாகக் கருத்தைச் செலுத்தினார்கள் என்பதை விளக்குவதற்காகத்தான்.

பௌத்த ஜைன மதத்தார் தாய்மொழியான தேசபாஷையில் பெரிதும் ஊக்கங்காட்டி, அந்த மொழி

யில் பொதுமக்களின் நன்மைக்காக நூல்கள் இயற்றி வைத்ததுபோல, வைதிக மதத்தைச் சேர்ந்த பிராமணர் தங்கள் மதநூல்களைத் தேச பாஷையில் எழுதிவைக்க வில்லை. ஏனென்றால், அவர்கள் தங்கள் மதக்கொள்கை களைத் தாங்கள்மட்டும் படிக்கவேண்டும், பிறர் அவற்றை ஒருபோதும் படிக்கக்கூடாதென்னும் குறுகிய மனப் பான்மை உடையவர்கள்.

வனப்புப் பொருந்திய தமிழ்மங்கை என்னும் பெரு மாட்டிக்குச் சிலம்பு, மேகலை, வளை, குண்டலம், மணி என்னும் விலைபெற்ற நற்கலங்களை அணிவித்து, என்றென் றும் அப் பெருமாட்டி அழகுடன் விளங்கச் செய்தவர் சமணராகிய பௌத்த ஜைன மதத்தினரேயாவர். அஃதா வது, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டல கேசி, சிந்தாமணி என்னும் ஐம்பெருங்காப்பியங்களை இயற்றித் தமிழ் மொழியை அழகுறச் செய்தவர் பௌத்த ஜைனரேயாவர். மணிமேகலை, குண்டலகேசி என்னும் இரண்டையும் பௌத்தரும்; சிலப்பதிகாரம், வளையாபதி, சிந்தாமணி என்னும் மூன்றையும் ஜைனரும் இயற்றினர். அவர்கள் அப்பெருமாட்டிக்கு அணிவித்த வேறு அணி கலன்களும் பலப்பல உண்டு.

பௌத்தர் (ஜைனருங்கூட) தமிழ் நாட்டிலே தமிழ் மொழியிலே தமது மதக்கொள்கையைப் பரப்பிய செய்தியை இதுகாறுங் கூறினோம். இதுவன்றியும், பௌத்தர், தமிழ் நாட்டிலே பிராமி எழுத்தைப் பரவச் செய்யக் காரணமாக இருந்தனர் என்பதை விளக்குவாம். பிராமி அல்லது பிராஹ்மி என்று கூறப்படும் எழுத்தைப் புதிதாகக் கண்டுபிடித்தவர் பகவான் புத்தர் எனக் க்ஷேமேந்திரர் என்பவர், தாம் இயற்றிய புத்தஜனனம் என்னும் நூலிலே கூறியுள்ளார்.

வர்தமான: குமாரோத
ஸர்வ வித்யா சுபாரக:
லிபிப்ர வீணோ பினவாம்
லிபிங் பிராஹ்மீம் வினிர்மமே

என்று அவர் கூறியுள்ளார். அதாவது: சித்தார்த்த குமாரன் (புத்தர்) இளமையில் எல்லாவித வித்தைகளையும் கற்று வளரும்போது, தாமாகவே பிராஹ்மி எழுத்தை உண்டாக்கி நிறுவினார் என்பது இச்செய்யுளின் கருத்தாகும்.

பிராஹ்மி எழுத்தை இந்தியா முழுவதிலும் பரவச் செய்தவர்கள் பௌத்தர்கள் ஆவர். கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்தியாவின் சக்கரவர்த்தியாக விளங்கியவரும், பௌத்த மதத்தை மேற்கொண்டதோடு, அம் மதத்தை இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பரவச்செய்தவருமாகிய அசோக சக்கரவர்த்தியார், தமது ஆட்சிக்குட்பட்டிருந்த நாடுகளிலெல்லாம் எழுதுவித்துள்ள கல்வெட்டுச் சாசனங்களில் பிராமி எழுத்தையே உபயோகித்து இருக்கிறார். காரோஷ்டி முதலான வேறு எழுத்துக்கள் அசோகர் காலத்தில் வழங்கி வந்தபோதிலும், அவற்றை உபயோகிக்காமல், பிராமி எழுத்தை உபயோகித்ததன் கருத்து அது புத்தர் உண்டாக்கிய எழுத்து என்னும் நம்பிக்கையாக இருக்கலாம். அசோகர் தமது ஆட்சிக்குட்பட்ட நாடுகளில் மட்டும் பிராமி எழுத்து உபயோகிக்கப்பட்டது என்று கருத வேண்டா. அவர் ஆட்சிக்குட்படாத தமிழ் நாடு, இலங்கைத் தீவுகளிலும், (அசோகர் காலத்திலே) எழுதப்பட்ட சாசனங்களும் பிராமி எழுத்துக்களாக உள்ளன. இவ்விடங்களிலும் இச்சாசனங்களை எழுதியவர்கள் பௌத்தர்கள் என்பது அறியத்தக்கது. எனவே, கி. மு. மூன்றாம் நூற்றாண்டில், அசோக சக்கரவர்த்தியும், அவரால் வேறு நாடுகளுக்கு அனுப்பப்பட்ட பிக்குகளும் பிராமி எழுத்தை எல்லா இடங்களிலும் பரவச்செய்தார்கள் என்பது அறியப்படுகிறது. அசோக சக்கரவர்த்தி தமது சாசனங்களில் பிராமி எழுத்தை உபயோகித்தபடியால், பிராமி எழுத்துக்கு அசோகர் எழுத்து என்றும் இக் காலத்தில் பெயர் வழங்குகிறார்கள்.

கி. மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 2-ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலங்களில் தமிழ் நாட்டிலே

எழுதப்பட்ட சாசனங்கள் பிராமி எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. இவற்றை எழுதியவர்கள் பெரும்பாலும் பௌத்தர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. பாண்டி நாட்டிலே, அழகர்மலை, கழுகுமலை, நாகமலை, சித்தர்மலை, திருப்பரங்குன்றம், கொங்கர் புளியங்குளம், கீழைவளவு, முத்துப்பட்டி, அரித்தாப்பட்டி, கருங்காலக்குடி, விரிச்சியூர், மருகால்தலை, குன்னக்குடி, திருச்சி ஜில்லா கருவூர் தாலூகாவில் உள்ள ஆறுநாட்டார்மலை முதலிய இடங்களில் உள்ள **பாண்டவமலை*** என்று அழைக்கப்படும் குன்றுகளில் உள்ள குகைகளில்பிராமி எழுத்துக்கள் காணப்படுகின்றன. இவ் விடங்களில் உள்ள பிராமி எழுத்தைப்பற்றி சென்னை அரசாங்கத்து ஆர்க்கியாலஜி, எபிகிராபி இலாக்காக்களின் அறிக்கைகளில் காணலாம்.† இச்சாசனங்கள் தமிழ்மொழியில் இருந்தும், எழுத்துக்கள் பிராமி எழுத்தாக உள்ளன.‡ 1800 ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் நாட்டிலும் பிராமி எழுத்து எழுதப்பட்டது என்பதற்கு இக்கல்வெட்டுச் சான்றுகள் அல்லாமல் வேறு சான்றும் எதிர்பாரா வண்ணம் கிடைத்திருக்கிறது.

புதுச்சேரிக்குத் தெற்கே பத்துமைல் தூரத்தில் உள்ள அரிக்கமேடு என்று வழங்கப்படுகிற சிறு கிராமம், 1800 ஆண்டுகளுக்கு முன்னே, (கி. பி. 2-ஆம் நூற்றாண்டில்) தமிழ் நாட்டிலே பேர்போன துறைமுகப்பட்டினமாக இருந்தது. இங்கு உரோமாபுரி நாட்டிலிருந்தும் கப்பல் வாணிகர் வந்து வாணிகம் செய்து வந்தனர். ஆனால், பேர்போன இந்தத் துறைமுகத்தைப் பற்றிப் புறநானூறு

---

* பௌத்தத் துறவிகள் வசித்த மலைக்குகைகள் ஏன் பாண்டவமலை என்று பெயர்பெற்றன என்பதை இந்நூல் 65-ஆம் பக்கம் காண்க.

† Arch Rep. 1913-14. P. 6; 1915. P 86. Epi. Rep. 1907, 1908, 1909, 1910, 1912, 1926-27, 1927-28.

‡ The earliest monuments of the Pandya Country and their inscriptions by K. V. Subramaniya Ayyer P 276-300, Proceedings and Transactions of the 3rd Oriental Conference. Madras.

முதலிய சங்கநூல்களில் யாதொரு குறிப்பும் காணப்பட வில்லை. இவ்விடத்தை, அண்மையில் அரசாங்கத்து ஆர்க்கியாலஜி உத்தியோகஸ்தர் தோண்டிப் பார்த்தபோது, பூமிக்குள்ளிருந்து பல பொருள்களைக் கண்டெடுத்தனர். அப்பொருளுடன் உடையுண்ட மட்பாண்டங்கள் நூற்றுக் கணக்காகக் கிடைத்தன. அம்மட் பாண்டங்கள் சிலவற்றில் பிராமி எழுத்துக்கள் எழுதப்பட்டுள்ளன. பாஷை தமிழாகவும், எழுத்து பிராமி எழுத்தாகவும் இருக்கின்றன.* இவ்வாறு தமிழ் நாட்டிலே 1800 ஆண்டுகளுக்கு முன்னே, பிராமி எழுத்து வழங்கிவந்த செய்தி, காட்டிலே மலைக் குகைகளில் காணப்படும் கல்வெட்டுகளினாலும், நாட்டிலே பூமிக்கடியில் கிடைக்கும் மக்கள் வழங்கிய மட்பாண்டங்களில் எழுதப்பட்ட எழுத்துக்களினாலும் வலியுறுகின்றது. பிராமி எழுத்தைத் தமிழ் நாட்டிலே புகுத்தியவர்கள் பௌத்தர்கள் என்பதில் சற்றும் ஐயமில்லை.

பிராமி எழுத்து கண்டுபிடிப்பதற்கு முன்பு வேறு எழுத்துக்கள் இல்லை என்று கருதவேண்டா. வடநாட்டிலே காரோஷ்டி முதலான எழுத்துக்கள் வழங்கிவந்தன. புத்த ஜாதகம் எனப்படும் பழைய பௌத்த நூலிலே, புத்தர் காலத்துக்கு முன்னரே எழுத்துக்கள் வழங்கிவந்த செய்தி கூறப்படுகிறது. தமிழ் நாட்டிலேயும், பிராமி எழுத்து வருவதற்கு முன்பே ஏதோ ஒருவகை எழுத்து வழங்கி வந்தது. தமிழகத்திலே பிராமி எழுத்து பௌத்தர்களால் புகுத்தப்பட்ட கி. மு. 3-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, பழைய தமிழ் எழுத்து வழக்கொழிந்துவிட்டது. ஆனாலும், புதிய பிராமி எழுத்தில் இல்லாததும் தமிழில் மட்டும் உள்ளதான ற, ழ, போன்ற எழுத்துக்களை மட்டும் விலக்காமல் பிராமி எழுத்தோடு சேர்த்துப் பண்டைத் தமிழர் வழங்கியிருக்கவேண்டும். கடைச்சங்க காலத்திலே, சங்கப்புலவர்கள் பிராமி எழுத்தையே எழுதியிருக்க

---

* Arikamedu: An Indo-Roman Trading Station on the East Coast of India. by R. E. M. Wheelar, A. Ghosh and Krishna Deva. P. 17—124. **Ancient India** No. 2 July 1946.

வேண்டும். பின்னர், பிராமி எழுத்திலிருந்து வட்டெழுத்து என்னும் ஒருவகை எழுத்தைத் தமிழர் உண்டாக்கிக் கொண்டு அதை வழங்கிவந்தனர்.

தமிழ் நாட்டிலேயிருந்த பௌத்த, ஜைனர்கள், தமது மதத்தைச்சேர்ந்த "தெய்வ" மொழிகளாகிய பாகத மொழிகளையும் (பாலி, சூரசேனி) வழங்கி வந்தார்கள். அவர்கள், தத்தம் சமய நூல்களை எழுதுவதற்குப் பிராமி எழுத்திலிருந்து கிரந்த எழுத்து என்னும் புதுவகை எழுத்தை உண்டாக்கினார்கள். இந்தக் கிரந்த எழுத்தைக்கொண்டு அவர்கள் பாகத (பிராகிருத) நூல்களையும் சம்ஸ்கிருத நூல்களையும் எழுதிவந்தார்கள். பின்னர், நாளடைவில், சோழநாட்டில், கிரந்த எழுத்திலிருந்து ஒருவகைத் தமிழ் எழுத்து உண்டாக்கப்பட்டு இப்போது வழங்கப்படுகிற தமிழ் எழுத்து வழங்கப்பட்டது. இந்தத் தமிழ் எழுத்துக்கும் கிரந்த எழுத்து என்பது பெயர். ஆனால், பாண்டிநாட்டில், பிராமி எழுத்திலிருந்து உண்டாக்கப்பட்ட பழைய வட்டெழுத்தே வழக்காற்றில் இருந்துவந்தது.

கி. பி. 9-ஆம் நூற்றாண்டிலே, சோழ நாட்டிலே, கிரந்தத் தமிழ் எழுத்து எல்லோராலும் பயன் படுத்தப்பட் டிருக்கவேண்டும். கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் சோழர்கள் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியபோது, அந்நாட்டில் வழங்கிவந்த வட்டெழுத்துக்களை மாற்றிப் புதிய கிரந்தத் தமிழ் எழுத்துக்களைப் புகுத்தினார்கள். ராசகேசரிவர்மன் என்னும் சிறப்புப் பெயரையுடைய ராசராசனும் (முதல் ராஜராஜன்) அவன் மகன் ராசேந்திரனும் (முதல் ராசேந்திரன்) பாண்டி நாட்டிலே கிரந்தத் தமிழ் எழுத்தை (இப்போது வழங்கப்படும் தமிழ் எழுத்தை)ப் புதிதாகப் புகுத்தினார்கள் என்று ஆராய்ச்சிவல்லார் கூறுவர். இந்தச் சோழ அரசர்கள் கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் கிரந்தத் தமிழ் எழுத்தைப் பாண்டிநாட்டில் புகுத்தியதற்குச் சான்று என்னவென்றால், குற்றாலத்தில் உள்ள குற்றாலநாத சுவாமி கோயில் சாசனங்களாகும். இச்சாசனங்கள், பழைய வட்டெழுத்

தில் எழுதப்பட்டிருந்த சாசனங்களைப் புதிய எழுத்தில் பெயர்த்தெழுதி ராசராசன் அமைத்தான் என்று கூறுகின்றன.*

இவ்வாறு பௌத்தர்களால் தமிழ் நாட்டில் புகுத்தப் பட்ட பிராமி எழுத்து சில நூற்றாண்டுகள் வழங்கிவந்து, பின்னர் அதிலிருந்து வட்டெழுத்து உண்டாகிச் சில நூற்றாண்டு வழங்கிவந்து, பின்னர், பிராமி எழுத்திலிருந்தே பௌத்த ஜைனர்களால் இன்னொரு வகையாக உண்டாக்கப்பட்ட கிரந்த எழுத்துக்களிலிருந்து கிரந்தத் தமிழ் எழுத்து உண்டாகி அவ்வெழுத்தே நாளதுவரை வழங்கப் பட்டுவருகிறது. அசோகர் எழுத்து எனப்படும் பிராமி எழுத்திலிருந்தே நாகர எழுத்து உண்டாகி இப்போது வடநாட்டில் வழங்கி வருகிறது. சுருங்கக் கூறினால், பிராமி எழுத்திலிருந்தே நாகரி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய எழுத்துக்கள் உண்டாயின. இதில் சற்றும் ஐயமில்லை. அறிஞர் ஆராய்ந்து கண்டுகொள்க.




* 454 of 1917, 455 of 1917, Epi. Rep. 1905, Epi. Rep. 1918. P. 144.

## ௧௦. மணிப்பிரவாள வரலாறு

பௌத்த மதமும் ஜைன மதமும் வடநாட்டிலே தோன்றிய மதங்கள். ஆகவே, அந்த மதநூல்கள், வடநாட்டில் வழங்கிய பாகத (பிராகிருத) மொழிகளில் எழுதப்பட்டன. பண்டைக்காலத்திலே, பௌத்த ஜைனர்கள் வடமொழி எனப்படும் சம்ஸ்கிருத மொழியில் தமது சமய நூல்களை எழுதவில்லை. ஏனென்றால், சம்ஸ்கிருதமொழி, பொதுஜனங்களால் பேசப்படாத (கற்றவர்க்கன்றி ஏனையோர்க்கு விளங்காத) பேச்சு வழக்கற்ற மொழியாக இருந்தது.* ஆகவே, பொதுமக்கள் தெரிந்து

* சம்ஸ்கிருத மொழி என்று கூறினால், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் ஆரிய வேதங்கள் எழுதப்பட்டதும், ஆரியர்கள் பேசியதுமான பழைய மொழி என்று ஒரு தவறான எண்ணம் கற்றவர்கள் இடத்திலும் நிலவி வருகிறது. இது தவறு. ஆரியவர்த்தம் எனப்படும் பஞ்சாப் சிந்து நதிக்கரைகளில் குடியேறிய ஆரியர் பேசிய மொழி சம்ஸ்கிருதம் அன்று. வேதகாலத்து ஆரியர் பேசிய ஆரிய மொழி இறந்து அழிந்து ஒழிந்து போயிற்று. பழைய ஆரியம் அழிந்தொழிந்த பிறகு, சம்ஸ்கிருதம் எனப்படும் வடமொழி மெல்ல மெல்ல உருவடையத் தொடங்கிற்று. பிறகு ஏறத்தாழ கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலே சம்ஸ்கிருதம் உருவடைந்தது. சம்ஸ்கிருதத்திலே, பழைய ஆரியச் சொற்களும், தொன்றுதொட்டு இந்தியாவில் வழங்கிவந்த பிராகிருதமொழிச் சொற்களும், திராவிட மொழிச் சொற்களும் கலந்துள்ளன. இவ்வாறு புதிதாக அமைக்கப்பட்ட சம்ஸ்கிருதத்துக்குப் புதிதாக இலக்கணமும் அமைக்கப்பட்டது. சம்ஸ்கிருதம் என்னும் பெயரே, இது புதிதாகத் தோன்றிய மொழி என்பதை வலியுறுத்துகிறது. (சமம்+கிருதம்=சமஸ்கிருதம்=நன்றாக, செம்மையாக (Perfected or Improved) செய்யப்பட்டது என்பது பொருள்). பிராகிருதம் என்பதற்கு அடிப்படையானது, அநாதியாக உள்ளது என்பது பொருள். சம்ஸ்கிருத மொழியிலே பல நூற்றுக்கணக்கான திராவிட மொழிகளும் கலந்திருப்பதைக் கற்றறிந்த அறிஞர் காட்டியுள்ளார்கள், புதிதாக உண்டாக்கப்பட்ட சம்ஸ்கிருதத்தில் திராவிடச் சொற்கள் கலக்கப்பட்டதற்குக் காரணம் என்னவென்றால், அக்காலத்திலே, (இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே) வட இந்தியாவில் திராவிட மொழிகள் வழங்கிவந்தன. திராவிடச்சொற்களும், பிராகிருதச் சொற்களும் பழைய ஆரியச் சொற்களும் சேர்ந்து புதிதாக அமைந்ததே சம்ஸ்கிருத பாஷை என்பதும், அதற்கும் பழைய ஆரிய பாஷைக்கும்

கொள்ளக்கூடிய பேச்சு வழக்கில் இருந்த பிராகிருத மொழிகளிலே பௌத்த ஜைனர்கள் தமது மதநூல்களை அக்காலத்தில் எழுதி வைத்தார்கள். பௌத்தர், மாகதி எனப்படும் பாலி மொழியையும், ஜைனர் அர்த்தமாகதி எனப்படும் சூரசேனியையும் தமது 'தெய்வ' மொழியாகக் கொண்டு அம்மொழிகளிலே தமது மதநூல்களை எழுதி வைத்தபடியினாலே, தமிழ் நாட்டிலே அந்த மதங்கள் பரவியபோது, தமிழரும் அந்த மத நூல்களைப் பயிலவேண்டியதாயிற்று. அந்தப் பிராகிருத மொழிகளிலே, சம்ஸ்கிருத மொழியில் உள்ளது போன்று, நான்கு ககரங்களும் நான்கு டகரங்களும், இரண்டு சகரங்களும், இரண்டு ஜகரங்களும் ஷ, க்ஷ, ஸ, ஹ முதலிய எழுத்துக்களும் உள்ளபடியினாலே, அவ்வெழுத்துக்கள் இல்லாத தமிழ் மொழியிலே அந்தப் பிராகிருத பாஷைகளை எழுதிப் படிக்க முடியவில்லை. ஆகவே, பௌத்த ஜைனர்கள தமது சமய நூல்கள் எழுதப்பட்ட பிராகிருத மொழிகளைத் தமிழருக்குக் கற்பிக்கவேண்டி, புதிதாக ஒருவகை எழுத்துக்களை உண்டாக்கினார்கள். பிராமி எழுத்துக்களிலிருந்து புதிதாக உண்டாக்கப்பட்ட அவ்வெழுத்துக்களுக்குக் கிரந்த எழுத்துக்கள் என்பது பெயர். இவ்வாறு பிராகிருதமொழிகள் முதன் முதல் தமிழ் நாட்டிலே பயிலப்படுவதற்குக் காரணமாக இருந்தவர் பௌத்த ஜைனர்களே.

[இடைக்காலத்திலே, கி. பி. 7-ம் நூற்றாண்டிற்குப் பிறகு, பௌத்த ஜைன மதங்கள் செல்வாக்கிழந்து பிராமண மதம் செல்வாக்குப் பெற்ற காலத்திலே, பிராகிருத மொழிகளுக்குச் செல்வாக்குக் குறைந்து சம்ஸ்கிருத மொழிக்கு ஆதிக்கம் ஏற்பட்டது. அப்போது பௌத்தர்களும் (முக்கியமாக மகாயான பௌத்தர்களும்) ஜைனர்களும் தமது மதநூல்களை வடமொழியில் எழுதி வைத்தார்கள்.]

---

மாறுபாடுகள் உண்டு என்பதும் அறியற்பாலன. பிராகிருத மொழிகள் முந்தியவை. சம்ஸ்கிருதம் பின்னால் உண்டானது. சம்ஸ்கிருதத்திலிருந்து பிராகிருத மொழிகள் உண்டாயின என்று சிலர் கருதுவது தவறு.

பௌத்தர்களும் ஜைனர்களும் பிராகிருத மொழியைக் கற்றவர்கள் என்பதைத் தேவாரத்தில் திருஞான சம்பந்தரும், சுந்தர மூர்த்தி சுவாமிகளும் கூறியுள்ளார்கள்.

"ஆகமத்தொடு மந்திரங்கள் அமைந்த சங்கதபங்கமாப்
பாகதத்தோ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா
மாசதக்கரி போற்றிரிந்து புரிந்துநின்றுணு மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன்திரு வாலவாயரன் நிற்கவே" (உ)

இதில், சங்கத பங்கதம் என்பது சம்ஸ்கிருத மொழியை; ப்ாகதம் என்பது பிராகிருத மொழியை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், பௌத்த ஜைனர்கள் பிராகிருத மொழியை ஓதியதை ஏளனம் செய்து காட்டுகிறார். அச்செய்யுள் :

"நமணநந்தியும் கருமவீரனும் தருமசேனனும் என்றிவர்
குமணமாமலைக் குன்றுபோல்நின்று தங்கள்கூறையொன் றின்றியே
ஞமணஞாஞண ஞாணஞோணமென் றோதியாயுரை நாணிலா
அமணராற்பழிப் புடையரோநமக் கடிகளாகிய அடிகளே" (9)

சம்ஸ்கிருத மொழியில் க்ஷகர, ஸகர, ரகரங்கள் அதிகமாகப் பயின்று வருவதுபோல, பிராகிருத மொழிகளிலே நகரம், ஞகரம், ணகரம், மகரங்கள் அதிகமாகப் பயின்று வருகின்றன. மாகதி, அர்த்தமாகதி மொழிகளைப் பயின்றவர்கள், அல்லது பயிலக் கேட்டவர்கள் இந்த உண்மையை நன்கறிவார்கள். இதைத்தான் மேலே காட்டிய தேவாரத்தில், சுந்தரமூர்த்திகள் "ஞமண ஞாஞண ஞாண ஞோணம்" என்று ஏளனம் செய்து காட்டுகிறார். இதனால், சம்பந்தர், சுந்தரர் காலத்திலும் அதாவது 7-வது 8-வது நூற்றாண்டுகளிலும் பௌத்த ஜைனர் பிராகிருத நூல்களை ஓதிவந்தார்கள் என்பது தெரிகிறது.

இடைக்காலத்திலே, பௌத்த ஜைனர்கள், தமிழ்ச் சொற்களையும் வடமொழிச் சொற்களையும் விரவிக் கலந்து **மணிப்பிரவாளம்** என்னும் புதியதோர் உரை நடையை உண்டாக்கினார்கள். மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட பௌத்த ஜைன நூல்கள் இடைக்காலத்திலே பயிலப்

பட்டன். பௌத்த மதம் தமிழ் நாட்டிலே முழுவதும் மறைந்துபோய்விட்டபடியால், பௌத்தச் சார்பான மணிப்பிரவாள நடை நூல்களும் அழிந்துவிட்டன. ஆனால், பௌத்தர் இயற்றிய வீரசோழியம் என்னும் தமிழ் இலக்கண நூலிலே மணிப்பிரவாள நடை குறிப்பிடப்படுகிறது.

"இடையே வடவெழுத் தெய்தில் விரவியல். ஈண்டேதுகை
நடையேது மில்லாத மணிப்பிர வாளம் நற்றெய்வச்சொல்லின்
இடையே முடியும் பதமுடைத் தாங்கிள விக்கவியின்
தொடையே துறைநற் பிரளிகை யாதி துணிந்தறியே",

என வரும் வீரசோழியம், அலங்காரப்படலச் (40) செய்யுள் காண்க.

ஜைனமதம் தமிழ்நாட்டிலே முழுவதும் மறைந்து விடாமல் இப்போதும் இருக்கிறபடியினாலே, அவர்கள் இயற்றிய ஸ்ரீபுராணம் முதலிய மணிப்பிரவாள உரைநடை நூல்கள் இன்னும் வழங்கப்படுகின்றன.

பிற்காலத்திலே, கி. பி. 13-ம் நூற்றாண்டிற்குப் பின்னர், வைணவ சமயத்தார், ஆழ்வார்கள் அருளிய தூய செந்தமிழ்ப் பாக்களுக்கு உரை யெழுதியபோது, பௌத்தர்களையும் சமணர்களையும் பின்பற்றி, மணிப்பிரவாள நடையில் உரைகளை (வியாக்கியானங்களை) எழுதினார்கள். அவர்கள் எழுதிய மணிப்பிரவாள உரைநூல்கள், படிப்பார் இல்லாமல் இப்போது பயனற்றுக் கிடக்கின்றன. ஏனென்றால், சம்ஸ்கிருதம் படித்தவர்களுக்குத் தமிழ் தெரியாத காரணத்தால், அவர்களுக்கு மணிப்பிரவாளம் விளங்குவதில்லை. தமிழ்மொழி படித்தவர்களுக்குச் சம்ஸ்கிருதம் தெரியாதாகையினாலே, அவர்களுக்கும் மணிப்பிரவாளம் விளங்குகிறதில்லை. வடமொழி தமிழ்மொழி இரண்டையும் கற்றவர்களோ மிகமிகச் சொற்பமானவர். ஆயிரத்தில் ஒருவராவது இரண்டையும் கற்றவர் உளரோ என்பதே ஐயத்திற் கிடமாயிருக்கிறது. அப்படிப் படித்தவர்களிலும் வைணவப் பற்றுள்ளவர் எத்தனை பேர்? இவ்வாறு, நாலாயிரப் பிரபந்தத்தின் மணிப்பிரவாள உரை இருந்தும்

இறந்த நூலாக இருக்கிறது. இது, தமிழ்நாட்டிலே மணிப் பிரவாள நடைக்கு இடமில்லை என்பதை மெய்ப்பிக்கும் சான்றாக விளங்குகிறது.

இதனால், பாகத மொழிகளைத் தமிழ்நாட்டிலே பயிலச் செய்தவர் பௌத்த ஜைனர்கள் என்பதும், அவர்கள் மூலமாகத் தமிழ் மொழியிலே சில பாகதச் சொற்கள் கலந்தன என்பதும், தமிழர் பாகத மொழிகளைக் கற்பதற்காக அவர்கள் கிரந்த எழுத்துக்களை உண்டாக்கினார்கள் என்பதும், இடைக்காலத்திலே, பிராமணீயம் ஆதிக்கம் பெற்று சம்ஸ்கிருதம் செல்வாக்குப் பெற்ற காலத்தில் பௌத்த ஜைனரும் சம்ஸ்கிருதத்தில் நூல்களை இயற்றினார்கள் என்பதும், அன்றியும் அவர்கள் மணிப்பிரவாள நடையைத் தமிழில் அமைத்து மணிப்பிரவாள உரைநடை நூல்களை இயற்றினார்கள் என்பதும், இப்போது மணிப்பிரவாள நடை வழக்கொழிந்து விட்டதென்பதும் கூறப்பட்டன.

இந்தச் சரித்திர வரலாற்றினை அறியாதவர்கள், தமிழ் மொழி ஆராய்ச்சி செய்கிறபோது, தமிழிலே பிராகிருத மொழிச் சொற்கள் நேராகக் கலந்திருப்பதை உணராமல், அச்சொற்கள் சம்ஸ்கிருத மொழி வாயிலாகக் கலந்தன என்று தவறாக முடிவு கட்டுகிறார்கள். முதலில் பௌத்த ஜைனர்கள் வழியாகப் பிராகிருத மொழிச் சொற்கள் கலந்தன; சம்ஸ்கிருத மொழிச் சொற்கள் சில பிற்காலத்தில் நுழைந்தன என்னும் சரித்திர உண்மையை மனத்திற் கொண்டு மொழியாராய்ச்சி செய்ய முற்படுவோர் உண்மையைக் காண்பார்கள். இவ்வாறு மொழியாராய்ச்சி செய்வோர், தமிழ்மொழியை நன்கு கற்றிருக்க வேண்டியதோடு பிராகிருத மொழிகளையும் சமஸ்கிருத மொழியையும் கற்றிருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் உண்மை காண முடியும்.

# கக. தமிழ்நாட்டுப் பௌத்தப் பெரியார்

## 1. இளம் போதியார்.

இவர் பெயரைக்கொண்டே இவர் பௌத்தர் என்பதை அறியலாம். இவர் தமிழ் மொழியில் வல்லவர். கடைச்சங்க காலத்தில் இருந்தவர். கி. பி. முதல், அல்லது இரண்டாவது நூற்றாண்டில் இவர் வாழ்ந்திருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. இவரது வரலாறு வேறொன்றும் தெரியவில்லை. இவர் இயற்றிய செய்யுள் ஒன்று நற்றிணை என்னும் சங்க இலக்கியத்தில் 72-ஆம் பாட்டாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றது. அப்பாடல் இது :

பேணுப பேணார் பெரியோர் என்பது
நாணுத்தக் கன்றது காணுங் காலை!
உயிர்ஓர் அன்ன செயிர்தீர் நட்பின்
நினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரி
தழிதக் கன்றால் தானே! கொண்கன்
யான்யாய் அஞ்சுவல்! எனினும் தானே
பிரிதல் சூழான்; மன்னே! இனியே,
கானல் ஆயம் அறியினும், ஆனா
தலர்வ தன்றுகொல் என்னும்! அதனால்,
புலர்வது கொல்அவன் நட்(பு) எனா
அஞ்சுவல் தோழி என் நெஞ்சத் தானே!

## 2. அறவண அடிகள்.

இவரது வரலாறு மணிமேகலை என்னும் நூலினின்றும் அறியக் கிடக்கின்றது. இவர் காவிரிப்பூம் பட்டினத்தில் நெடுங்காலம் வாழ்ந்திருந்தவர். இவரது இளமையில் இவர் வடக்கே கங்கை முதல் தெற்கே இலங்கையில் உள்ள பாத பங்கய மலைவரையில் யாத்திரை செய்தவர் என்று தெரிகின்றது. பௌத்த தருமத்தை இவர் நன்கு கற்றவர். அதனோடு அதைப் பலருக்கும் போதித்துவந்தவர். இவர் நாவன்மை படைத்தவர் என்று தோன்றுகின்றது. காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு பௌத்தப் பள்ளியின் தலைவராக இருந்தவர். கோவலன் கொலையுண்ட செய்திகேட்டு, மாதவி தன் மகள் மணிமேகலையுடன் இவரது பள்ளியையடைந்து இவரிடம் பௌத்த தருமங் கேட்டுச் சீலத்தை மேற்கொண்

டாள். சோழமன்னன் மனைவி இராசமாதேவி மணிமேகலையைச் சிறைப்பிடித்து வைத்திருந்தபோது, அவளைச் சிறை வீடு செய்ய இவர் அரண்மனை சென்றார். இவரது வருகையைக்கண்ட இராசமாதேவி மிகுந்த வணக்கத்தோடு இவரை வரவேற்றாள் என்று கூறப்படுவதினின்றும், அரசகுடும்பத்தினராலும் இவர் நன்கு மதிக்கப்பட்டிருந்தவர் என்பது விளங்கும். காவிரிப்பூம்பட்டினத்தில் கடற்பெருக்குண்டானபோது, இவர் அதனைவிட்டு மாதவியுடன் சேரநாட்டு வஞ்சிமாநகரம் சென்று, அங்குச் சிலநாள் தங்கியபின் காஞ்சிமாநகரம் சென்று, கடைநாள் வரையில் அங்கேயே தங்கியிருந்தார். பின்னர், அங்கு வந்த மணிமேகலைக்குப் பௌத்த தருமத்தை ஐயமறப் போதித்தார். நீண்ட நாள் வாழ்ந்திருந்த இவர் காஞ்சிமாநகரத்திலே நிர்வாணம் பெற்றார். இவரது காலம் முதல் நூற்றாண்டின் பிற்பகுதியும் இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும்.

இப்பொழுது காஞ்சீபுரத்தில், 'அறப்பணஞ்சேரி' என்னும் பெயருடைய தெரு ஒன்று இருக்கிறதென்றும், அது 'அறவணஞ்சேரி' என்பதன் மரூஉ என்றும், இந்த அறவணஞ்சேரி என்னும் தெருவில் அறவண அடிகள் வாழ்ந்திருத்தல் கூடுமென்றும்,ஆனதுபற்றியே அவர் பெயரால் அறப்பணஞ்சேரி (சேரி—தெரு) என்று வழங்கப்பட்டதென்றும் கூறுவர் வித்வான் ராவ்சாகிப் மு. இராகவ அய்யங்கார் அவர்கள். அறப்பணஞ்சேரித் தெரு காஞ்சீபுரத்துக் காமாட்சியம்மன் கோயில் சந்நிதித் தெருவின் கிழக்கில் தெற்கு மேற்காக உள்ளது.

அறவண அடிகளைப் பிற்காலத்தில் இருந்த தருமபாலர் என்னும் பௌத்தர் என்று கூறுவர் சிலர். தருமபாலர் என்பது அறவண அடிகள் என்பதன் நேர் மொழி பெயர்ப்பு என்று இவர் கருதுவதால், இவ்வாறு கூறுகின்றனர்போலும். அறவண அடிகள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர். தருமபாலரோ கி. பி. ஆறாம் நூற்றாண்டில் இருந்தவர். இதனால் அறவண அடிகள் வேறு; தருமபாலர் வேறு என்பதை அறியலாம்.

அறவண அடிகள் என்பவர் ஒருவர் உண்மையில் இருந்திலர் என்றும், மணிமேகலையில் கூறப்படுபவர் ஒரு கற்பனைப் பெரியார் என்றும் சிலர் கூறுவர். இவ்வாறு இவர்கள் கூறுவதன் காரணம் யாதெனில், அறவண அடிகள் ஆகாய வழியாகச் சென்றார் என்பதும், மணிமேகலை, மாதவி முதலியவர்களின் பழம்பிறப்பில் இவர் அவர்களைக் கண்டதாகக் கூறப்படுவதுமே. இவை மானிட ஆற்றலுக்கு அப்பாற்பட்ட செய்கைகளாதலின், இவரைக் கற்பனைப் பெரியார் என்பர். இவ்வாறு கருதுவது தவறு என்று தோன்றுகின்றது. இறந்தகால, நிகழ்கால, எதிர்கால நிகழ்ச்சிகளையறிதல், வேறிடங்களுக்கு வானத்தில் பறந்து செல்லுதல் முதலியவை பௌத்தமதக் கொள்கைப்படி பௌத்த தேரர்களுக்கு ஏற்பட்ட இலக்கணங்களாகும். இதனை 'ரித்தி' என்பர். 'ரித்தி' எனினும் 'சித்தி' எனினும் ஒக்கும். பௌத்த மதத்தில் மட்டுமன்று; இந்து மதத்திலும் சங்கராச்சாரியார், சம்பந்தர் முதலிய பெரியார்களும் மானிட ஆற்றலுக்கப்பாற்பட்ட தெய்விகச் செயலைச் செய்தவர் என்று கூறப்படுகின்றது. அதுகொண்டு இவர்களையும் கற்பனைப்பெரியார் என்று கருதத்தகுமோ? இவற்றை அவ்வச்சமயக் கொள்கை என்று ஒதுக்கி விடுவோமாயின், அவர்களும் உண்மைப் பெரியாரே என்பது விளங்கும்.

## 3. மணிமேகலை.

யாம் அறிந்த வரையில், தமிழ்நாட்டில் பெயர் பெற்ற பௌத்தப் பிக்ஷுணி இவள் ஒருத்தியே. இவளது வரலாறு மணிமேகலை நூலினால் அறியப்படுகின்றது. காவிரிப்பூம்பட்டினத்தில் செல்வத்திற் சிறந்த கோவலன் என்பவனுக்கும், அவனது காமக்கிழத்தி மாதவி என்பவளுக்கும் பிறந்தவள் மணிமேகலை. இக்குழந்தை செல்வமாக வளர்க்கப்பட்டுத் தக்க வயதடைந்த பின்னர், இசைக்கலை நாடகக்கலைகளைக் கற்றுத் தேர்ந்து மங்கைப்பருவம் அடைந்தது. இந்நங்கையின் கட்டழகினையும், இசைக்கலை நாடகக்கலைகளில் அடைந்துள்ள தேர்ச்சியினையும் கண்டு, சோழ அரசன்

மகன் உதயகுமாரன் என்பவன் இவள்மேல் காதல் கொண்டான்.

இவ்வாறிருக்க, மணிமேகலையின் தந்தை கோவலன் மதுரைமாநகரம் சென்று, ஆங்குப் பொய்க்குற்றஞ் சாற்றப்பெற்றுக் கொலையுண்டிறந்தான். கோவலன் இறந்த கொடுஞ் செய்தியைக் கேட்டு மாதவி மனம் நொந்து, உலகினை வெறுத்துத் தன் மகள் மணிமேகலையுடன் அறவண அடிகள் என்னும் பௌத்த பிக்ஷு இருந்த பௌத்தப் பள்ளியில் சரணடைந்து, பௌத்த சீலத்தை மேற்கொண்டாள். மணிமேகலையை நாடகக்கணிகை வாழ்க்கையில் புகுத்த அவளது பாட்டி சித்திராபதி என்பவள் கடுமையாக முயன்றாள். ஆயினும், மணிமேகலை அந்த வாழ்க்கையில் புக இசையவில்லை. அரசன் மகன் உதயகுமாரனும் அவளைத் தன் காமக்கிழத்தியாக்க முயன்றான். அதற்கும் அவள் உடன் படவில்லை. ஆனாலும், அவன் அவளை விடாமல் அவளிடம் சென்று, அடிக்கடி பிக்ஷுணி கோலத்தை விட்டுவிடும்படி வேண்டினான். மணிமேகலை இலங்கையின் வடபால் உள்ள மணிபல்லவம் சென்று, அங்கிருந்த பாத பீடிகையைத் தொழுது, மீண்டும் காவிரிப்பூம்பட்டினம் வந்தாள். அது முதல் அவள் உலகவறவி என்னும் அம்பலத்தில் சென்று, தான் ஐயமேற்று வந்த உணவை அங்கிருந்த கூனர், குருடர், முடவர் முதலிய எளியவருக்குக் கொடுத்து, அவர்களது பசிப்பிணியை நீக்கிவந்தாள். இந்தச் செய்தியைக் கேட்ட சோழமன்னன் மணிமேகலையை அழைத்து, அவளது பொதுநல ஊழியத்தைப் பாராட்டி, அவளுக்கு வேண்டிய வரத்தைக் கேட்கச் சொன்னான். அவள் சிறைச்சாலையை அறச்சாலையாக மாற்றியமைக்கவேண்டும் என்று வேண்ட, அவ்வாறே அரசன் செய்தான்.

காயசண்டிகை என்பவள் ஒருத்தி வடநாட்டினின்றும் காவிரிப்பூம்பட்டினம் வந்து பிச்சையேற்றுண்டு வாழ்ந்து வந்தாள். அவள் மணிமேகலையைப் போன்ற உருவம் உடையவள். இந்தக் காயசண்டிகையைத் தேடிக்கொண்டு

அவள் கணவன் அந்நகரத்திற்கு வந்தான். அப்போது, உலகவறவி என்னும் அம்பலத்தில் மணிமேகலையுடன் உதயகுமாரன் சொல்லாடிக்கொண்டிருந்தான். அவனுக்கு மணிமேகலை, நிலையாமையைக் கூறித் தன்மேல் அவனுக்குள்ள காதலை விட்டுவிடும்படி கூறிக்கொண்டிருந்தாள். காயசண்டிகையைத் தேடிக்கொண்டு வந்த அவள் கணவன் மணிமேகலையைக் கண்டு, அவள்தான் தன் மனைவியாகிய காயசண்டிகை என்று தவறாகக் கருதி, அவள் இன்னொரு ஆடவனோடு பேசுவதைக் கண்டு பொறாமல், உண்மையை அறிய அங்கு ஒரு மூலையில் பதுங்கியிருந்தான். உதயகுமாரன் மணிமேகலையை விட்டுச் சென்று, இரவு வந்தபோது மீண்டும் அவ்விடம் வந்தான். உருவ ஒற்றுமையால் தன் மனைவி என்று தவறாகக் கருதியிருந்தவனாதலின், காயசண்டிகையின் கணவன் இரவில் வந்த உதயகுமாரனை வாளால் வெட்டி வீழ்த்தினான். தன் மனைவி என்று மணிமேகலையைக் கருதியதும், உதயகுமாரன் அரசன் மகன் என்று அறியாததும் இந்நிகழ்ச்சிக்குக் காரணம்.

தவறுதலால் ஏற்பட்ட இந்த நிகழ்ச்சியைப் பொழுது விடிந்த பின்னர் மக்கள் அறிந்தனர். உலகவறவியில் இருந்த முனிவர்கள் இதனை அரசனுக்கு அறிவித்தனர். அரசன் உண்மை அறிந்து, மணிமேகலையை நகரமக்கள் துன்புறுத்தா வண்ணம் காவலில் வைத்தான். இராசமாதேவி தன் மகன் இறந்தது மணிமேகலையினால் என்று கருதி, அவளுக்கு ஊறு செய்ய நினைத்து, அவளைக் காவலினின்று தன்னிடம் அழைத்துக்கொண்டு, அவளுக்குப் பற்பல துன்பங்களைச் செய்து பார்த்தாள்; ஒழுக்கவீனமுள்ளவள் என்று அலர் தூற்றவும் முயன்றாள். இவற்றிற்கெல்லாம் மணிமேகலை உட்படாமல் தன் நிலையைக் காத்துக்கொண்டாள். இவளது உண்மை நிலையை அறிந்த பின்னர், இராசமாதேவி தன் குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டு மணிமேகலையைச் சிறைவிட்டாள்.

பின்னர், மணிமேகலை, தான் அந்நகரில் இருந்தால் அரசகுமாரன் இறப்பதற்குக் காரணமாயிருந்தவள் என்று

ஊரார் குறைகூறுவாராதலின், அந்நகரத்தில் இருக்க விரும்பாமல், அறவண அடிகள், மாதவி முதலியவர்களிடம் விடைபெற்றுச் சாவகநாடு சென்றாள். சென்றாள் சென்ற பின்னர், அங்கிருந்து சேரநாட்டின் தலைநகரமான வஞ்சிமா நகர் சென்று, அங்கு வாழ்ந்திருந்த பற்பல சமயத்தவரையுங் கண்டு, அவ்வவர்களின் சமய உண்மைகளை அறிந்தாள். அவற்றால் ஒன்றும் மனம்தேறாமல், கடைசியாகக் காஞ்சிமா நகருக்குச் சென்று, அங்கு வந்திருந்த அறவண அடிகளிடம் பௌத்த தரும மெய்ப்பொருளைக் கேட்டு உணர்ந்து, நெடுநாள் நோற்று, கடைசியில் அவ்வூரிலேயே காலமானாள்.

மணிமேகலையின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

மணிமேகலை வரலாற்றிலும், பௌத்தமதக் கொள்கைப்படி, வானத்தில் பறந்து செல்லுதல், 'அமுத சுரபி' என்னும் சிறு பாத்திரத்தினின்றும் நினைத்தபோதெல்லாம் வேண்டிய அளவு உணவை உண்டாக்கிக் கொடுத்தல் முதலிய ரித்திகள் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றை உண்மை என்று கொள்ளாமல் சமயக்கொள்கை என்று ஒதுக்கிவிடுவர் பகுத்தறிவாளர்.

'மணிமேகலை' என்னும் பெயருள்ள பௌத்த தெய்வம் ஒன்று உண்டு. அதன் வரலாற்றினை இந்நூல் இணைப்பில் காண்க.

## 4. சீத்தலைச் சாத்தனார்.

இவர் பௌத்தர் என்பதை இவரது பெயரே விளக்குகின்றது. புத்தருக்குரிய பெயர்களுள் சாஸ்தா என்பதும் ஒன்று. இச்சொல் திரிந்து தமிழில் 'சாத்தன்' என்று வழங்குகின்றது. 'சீத்தலை' என்னும் அடைமொழி கொண்டு சீ வழிந்தோடும் புண்ணுடைய தலையர் இவர் என்றும், பிறர் பாடும் பாட்டுக்களிற் குற்றங்கண்டால் அக்குற்றத்தைப் பொறாமல், எழுத்தாணியால் தமது தலையைக் குத்திக்கொள்ள, அதனால் எப்போதும் இவர் தலையில்

